# இலக்கியச் சிறு கதைகள்

## 2





திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
திருநெல்வேலி  சென்னை-1.

கழக வெளியீடு : ௪௧௮

# இலக்கியச் சிறுகதைகள்



## இரண்டாம் பகுதி



ஆசிரியர்கள் :

சு. அ. இராமசாமிப் புலவர்

பண்டித-வித்துவான்,

மீ. பொன். இராமநாதன் செட்டியார்



[நான்காம் பதிப்பு]

:: திருநெல்வேலி, தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி, :: சென்னை - 1.

# முகவுரை

மாணவர்களும் பொதுமக்களும் உயர்ந்த கருத்துக்களையும் கதைவழியாகச் சொன்னால் எளிதாகப் பற்றிக் கொள்வார்கள். இவ்வுண்மை யுணர்ந்தே ஆங்கில முதலிய பிறமொழியாளர்கள் ஏராளமான கதைநூல்களை வெளிப் படுத்தித் தங்கள் தங்கள் மொழிகளைப் பரப்பி வருகின்றார்கள்.

நமது அருமைத் தாய்மொழியாகிய அமிழ்தினும் இனிய தமிழ்மொழிக்கண் சிறு சிறு கதைகள் மிகவும் குறைவு. இக்குறைவை யொழித்து நிறைவு செய்வதன் பொருட்டுச் செந்தமிழ் மொழிக்குப் பலவகையாலும் ஆக்கந்தேடி இடையறாது உழைத்துவரும் திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் அப் பணியினை எமக்கு அளித்துள்ளார்கள்.

யாங்களும் பழைய நல்லிசைப் புலவர்கள் பாடி யருளிய அரும்பெரும் இலக்கியங்களிலிருந்து இனிமையும் சுவையும் பயக்கும் செய்யுள்களிலுள்ள கருத்துக்களைக் கதைகளாக அமைத்து எளிய இனிய செந்தமிழ் நடையில் எழுதியிருக்கின்றோம். அவ்வக் கதைகளுக்குரிய செய்யுட்களையும் கீழே வரைந்திருக்கின்றோம். இம்முறையில் பல கதைநூல்கள் தொடர்ச்சியாக வெளிவரும். அவற்றுள் இவ்விரண்டாம் புத்தகத்தையும் ஆசிரியர்களும் பொது மக்களும் வாங்கிக் கற்பித்தும் கற்றும் பயன் எய்தி எங்களை ஊக்கப்படுத்த வேண்டுகின்றோம்.

சு. அ. இராமசாமி,
மீ. பொன். இராமநாதன்.

---

அப்பர் அச்சகம், சென்னை 1.

## உள்ளுறை

# இலக்கியச் சிறுகதைகள்

## இரண்டாம் பகுதி



### க. கடவுள் உண்மை

இரு நண்பர்கள் ஓரிடத்தில் எதிர்ப்பட்டனர். ஒருவன் கல்வியறிவு நிரம்பப் பெற்றவன். மற்றவனோ சில நூல்களை அரைகுறையாகப் படித்தவன். இவர்களிருவருக்கும் கடவுள் என்று ஒருவர் இருப்பது மெய்யா பொய்யா என்பதைப்பற்றிச் சொற்போர் நடந்தது. அரைகுறையாகப் படித்தவன், "கடவுள் என்று ஒருவர் இருப்பது பொய். அப்படி யிருப்பின் அவர் எல்லோருடைய கண்களுக்கும் காணப்பெறுதல் வேண்டும். காணப்பெறுகின்ற பொருள்கள் தாமே உண்மையாவன. காணப்பெறாத ஒரு பொருள் இருக்கின்றதென்று எவ்வாறு ஒப்புக்கொள்ளுதல் கூடும்? ஆதலின், 'கடவுள்,' என்று பலராலுங் கூறப்பெறும் ஒன்று உண்மையில் இல்லை யென்றே நான் உறுதியாகக் கூறுகிறேன். இவ்வுலகம் முழுவதும் இயற்கையாகவே தோன்றி மறைகின்றது என்பதற்கு எள்ளளவேனும் ஐயம் இல்லை," என்றான்.

இவன் கூறியதைக் கேட்ட நண்பன், 'நீ கூறுவது தகுதியன்று. கண்ணுக்குக் காணப்பெறாதவைகளெல்லாம் இல்லையென்று நாம் முடிவுகட்டுதல் தகுதியாகுமா? ஒரு வீட்டைப் பார்க்கின்றோம். அதனைக் கட்டிய கொற்றன் ஒருவன் இருப்பான் என்பதை ஐயப்படாது நம்பவில்லையா? பலவிதமான அணிகலன்களைப்

பார்க்கின்ருேம். அவற்றைச் செய்த பொற்கொல்லர் இருப்பரென்பதை நாம் மறுத்தல் இயலுமா? ஒரு வேட்டியைப் பார்க்கின்ருேம். அதனை நெய்தான் ஒருவன் இருப்பதைப்பற்றி நமக்குச் சிறிதேனும் ஐயம் ஏற்படுகின்றதா? இல்லையன்ருே? இவைகளைப் போன்று, கண்ணுக்குக் காணப்பெறும் இவ்வழகிய உலகத்தினையும் உண்டாக்கிய ஒரு கடவுள் இருத்தல் கூடும் என்னும் உண்மையில் நமக்கு ஐயம் ஏற்படுவ தற்கு இடம் ஏது? இவைகளெல்லாம் இயற்கை யென்று கூறுவோமாயின், இவ்வுலகை யெல்லாம் ஆக்கி யளித்து அழிக்கும் ஆற்றல் அவ்வியற்கைக்கு உண்டா? உண்டெனின், அவ்வியற்கையையே ஏன் நாம் கடவுள் என்று துணிதல் கூடாது?' என்ருன்.

இதனைக் கேட்ட முதல் நண்பன் 'நீ கூறுவது பொருந்தும். இவ்வுலகத் தோற்றத்தைக்கொண்டே கடவுள் ஒருவர் இருக்கின்ருர் என்பதை நான் ஒப்புக் கொள்ளுகின்றேன். இல்லையென்று கூறும் எனது அறியாமைப் பேச்சை இனிமேல் விட்டுவிடுகின்றேன்,' என்ருன்.

மண்டப மாதி கண்டோர் மயனுளன் என்னல்போலும்
குண்டல முதல்கண் டோர்பொற் கொல்லனுண்(டு)
என்னல் போலும்
ஒண்துகில் கண்டோர் நெய்தோன் ஒருவனுண்(டு)
என்னல் போலும்
அண்டமற் றகண்டஞ் செய்தோன் உளனென
அறிவாய் நெஞ்சே.

(அ - ரை.) மயன் - தச்சன். குண்டலம் - காதணி. ஒண்துகில் - ஒள்ளிய உடை. அண்டம் - இவ்வுலகம். அகண்டம் - பரந்துள்ள எல்லா உலகும்.

---

## உ. மெய்யறிவாளிகள் தன்மை

திருவாரூரிலே ஒரு பெரியவர் நீண்டநாளாகத் தங்கியிருந்தார். அவர் உண்மையான மெய்ஞ்ஞானம் கைவரப்பெற்றவர். அவருடைய தன்மை எல்லோருக்கும் தெரியாது. அவர் எத்தனையோ அறிவுநூல்களைப் படித்ததின் பயனுகவும் அவற்றின்வழி ஒழுகியதன் பயனுகவும் உண்மையறிவு கைவரப்பெற்று விளங்கினுர். அவர் இவ்வுலக நிகழ்ச்சிகள் எவற்றையுமே ஒரு பொருளாக மதிக்கவோ நினைக்கவோமாட்டார். அத்தகைய உயர்ந்த நிலைமை அவருக்குக் கிட்டியிருந்தது. அப்பெரியவர் கடந்தகால நிகழ்ச்சிகளையோ, எதிர்கால நிகழ்ச்சிகளையோ அல்லது நிகழ்கால நிகழ்ச்சிகளையோ ஒன்றும் எண்ணுவதில்லை. உணவுக்ாக ஓரிடத்திற்குப்போய் ஒருவரை இரக்கமாட்டார். எவரேனும் இவர் தன்மையை யறிந்து உணவுகொண்டு வந்து எதிரேவைத்தால் அதைத்தான் புசிப்பார்.

இத்தகைய பெரியார் எழுந்தருளியிருந்த திருவாரூரிலே ஒருவன் இறந்துபோய்விட்டான். அவன் மிகுந்த இளைஞன். அப்பொழுதுதான் திருமணஞ் செய்துகொண்டவன். இறந்தவனுடைய உற்ருர் உறவினர் முதலிய அனைவரும் பேராரவாரத்துடன் அழுது புலம்பினர். அந்நாளில் அத்திருவாரூருக்கு மற்ருெரு பெரியவர் வந்தார். அவருடைய பெயர் பட்டினத்தடிகள். இவரும் உண்மையான அறிவு கைவரப்பெற்றவர். இவரைக் குறித்துப் பெரியோர்கள், "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல் ஆருந்துறப்ப தரிதரிது," என்று புகழ்ந்து பாராட்டியிருக்கிருர்கள். இப்பெரியார் உயிர்களிடத்தில் மிகுந்த

இரக்கமுடையவராதலின் ஒருவர் துன்பத்தைக் கண்ட போது அதனை நீக்கிவிடுவார். இத்தகைய பெரியார் மேற்கூறிய இளைஞன் இறந்துபோன தெருவழியே சென்றுகொண்டிருந்தார். உற்றார் உறவினரின் அழுகையொலி அவர் உள்ளத்தை உருக்கியது. அவர் இறந்து போன அவ்விளைஞனை உயிர்ப்பித்து அவனுடைய சுற்றத்தினரின் துன்பத்தைப் போக்கியருளினார். அவ்விளைஞன் உயிர்பெற்றெழுந்து பழமைபோல் உயிர் வாழ்ந்துகொண்டிருந்தது பலருக்கும் பெரும் வியப்பையளித்தது. சிலர் முற்கூறிய பெரியாரிடஞ் சென்று பட்டினத்தடிகளின் செயற்கருஞ் செய்கையைக் கூறினர். அப்பெரியார் இதனைக் கேட்டு மகிழ்ச்சியடையவோ வியப்படையவோ இல்லை. இவரிடம் வந்து அச்செய்தியைக் கூறியோர் என்னே இப்பெரியாரின் மாண்பு என்று புகழ்ந்து போயினர்.

*சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்*
*நின்றது புசிப்பார் வெய்யில் நிலவாய்விண் விழுது வீழ்ந்து*
*பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா ஒன்றும் பாரார்*
*நன்றறி தென்னார் சாட்சி நடுவான சீவன் முத்தர்.*

(அ-ரை.) *சென்றது - இழந்துபோனவற்றை. வெய்யில் நிலவாய் - சுடுந்தன்மையுள்ள வெய்யில் நிலவுபோலானாலும். விண் விழுது வீழ்ந்து - விண்ணிலிருந்து விழுதிறங்கினாலும். பொன்றின - இறந்துபோன. சீவன்முத்தர் - வீடுபேற்றிற்குத் தகுதியுடையராய் வாழ்ந்திருக்கும் உண்மை அறிவாளிகள்.*

---

## ௩. செய்ந்நன்றி கொன்றவள்

பழந்தமிழ் மன்னன் ஒருவன் பெருங் கொடையாளியாக விளங்கினான். அவன்புகழ் எட்டுத்திக்குகளிலும் பரவியிருந்தது. ஒரு புலவர் அந்த மன்னனுடைய கொடைச் சிறப்பைக் கேள்விப்பட்டுத் தம்முடைய வறுமையைப் போக்கிக்கொள்ளலாம் என்னும் எண்ணத்துடன் நெடுந்தூரத்திலேயிருந்து அம்மன்னனுடைய ஊருக்கு வந்தார். புலவருடைய பொல்லாத காலம் இவர் வருவதற்கு இரண்டொரு நாட்கட்கு முன்புதான் அவ்வரசன் இறந்துபோனான்.

அம்மன்னனுக்குப் பிள்ளையில்லை யாகையால் அம் மன்னனுடைய மனைவியே அரியணையிலமர்ந்து அரசாட்சி செய்யலானாள். தன்னுடைய கணவன் இரவலர்கட்குப் பொருட் குவியல்களை வாரி இறைத்துச் செல்வக் களஞ்சியத்தை வறுமைப்படுத்தி வைத்திருப்பதால், தான் இரவலர் கொடையை யெல்லாம் நிறுத்திக் களஞ்சியத்தை நிரப்பவேண்டுமென்பது அவளுடைய எண்ணம்.

வறுமையால் வாடி வந்த புலவர் அரசியின் முன்னர்ச் சென்று தமது வறுமையின் கொடுமைகளை யெல்லாம் உருக்கமாகக் கல்லும் கரையும்படியாகக் கூறினார். புலவர் நிலைமையைக் கேட்ட அரசிக்கு உண்மையாகவே உள்ளம் இளகியது. நமக்கு முன்பு முதலாவதாக வந்து குறைகூறும் இவருக்கு உடனே இல்லை யென்று கூறின், அமைச்சர் முதலிய அரசினர் தன்னைப் பிசுவினிக் குணமுடையவளென இகழ்வரென்று எண்ணியவளாய், 'என் மனம் இன்னும் பழைய நிலைமைக்கு வரவில்லை. மன்னன் பிரிவினால் இன்னும் வருந்திக்

கொண்டேயிருக்கிறது. ஆதலின் போய்விட்டு நாளைக்கு வாரும்,' என்று கூறினாள். புலவரும் அப்படியே போய்விட்டு மறுநாள் வந்தார். இப்படியே நாட்கள் பல கடந்தன. அரசியின் மொழிகளில் புலவருக்கு நம்பிக்கை யில்லாமற் போய்விட்டது. இன்றைக்கென் பதும் நாளைக்கென்பதும் இல்லையென்பதற் கடையாளம் என்பதைப் புலவர் நன்குணர்ந்துகொண்டார். ஆகவே அவர் அரசியிடம் சென்று, "ஓ அரசியே! நீ நன்றி கொன்றவளாக இருக்கிறாய். இவ்வாறு செய்ந்நன்றி கொல்வது உன்னையொத்த அரசிகட்குத் தகுமா," என்று கேட்டார்.

அதற்கு அரசி, 'நான் செய்ந்நன்றி மறந்தவளென் கின்றீரே! நீவிர் எனக்கு என்ன நன்மை செய்தீர்; நான் அதை மறந்துவிட்டேன்?' என்று கேட்டாள். அதற் குப் புலவர், 'ஓ அரசியே! செய்ந்நன்றி கொல்வதென் றால் ஒருவர் செய்த நன்மையை மறந்துவிடுவதுதான் செய்ந்நன்றி கொல்லுதல் என்று நீ நினைத்துக்கொண் டிருக்கிறாய் போலும். அப்படியன்றி, இவ்வுலகிலே தம்மால் கொடுக்கமுடியாத ஒரு பொருளை மற்றவர்க்கு இல்லையென்று கூறுவது பழிப்பன்று. அஃது உலகத் தின் இயற்கையேயாகும். ஒரு பொருளை ஒருவனுக் குக் கொடுக்கிறேன் என்று கூறிவிட்டுப் பிறகு அவனு டைய அவாக்கெடும்படி இல்லாமற் செய்வது செய்ந் நன்றி கொல்லுவதைப் போலத் தீமை பயக்கும்,' என்று கூறினார். புலவர் கூறியதைக் கேட்ட அரசி ஒன்றும் பதில் கூறாது தலை கவிழ்ந்திருந்தாள். புலவர் அரசியின் தன்மையை நன்குணர்ந்துகொண்டபடியால், அரசியி னிடம் பொருள் பெற்று வறுமை நீக்கலாம் என்னும் எண்ணமற்று வேற்றிடம் நாடிச் சென்றார்.

இசையா ஒருபொருள் இல்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத்து இயற்கை - நசையழுங்க
நின்றோடிப் பொய்த்தல் நிரைதொடீஇ செய்ந்நன்றி
கொன்றாரிற் குற்றம் உடைத்து.

(அ - ரை.) இசையா - முடியாத. வசை - பழிப்பு. வையம் - உலகம். நசை - அவா. ஓடி—நாட்கடந்து. நிரைதொடீஇ—வரிசையாக வளையல்களை யணிந்த கையை யுடையவளே (அன்மொழித்தொகை)

---

## ச. மழைக்கு அஞ்சிய மந்திகள்

திருவையாறு என்பது ஓரழகிய ஊர். அவ்வூரிலே இறைவன் திருக்கோயில் கொண்டிருக்கிறார். இவ்வூர் தென்கயிலாயமென்றுஞ் சிறப்புடன் புகழப்பெறும். கயிலாயக் காட்சிக்குக் கரை கடந்த காதலுடன் சென்ற திருநாவுக்கரசு அடிகளுக்கு இவ்வூரிலேதான் இறைவன் கயிலாயக் காட்சி கொடுத்தருளினார்.

இக்கோயிலை எப்போது பார்க்கினும் இறைவனை வழிபடவரும் தொண்டர் கூட்டம் மண்டியிருக்கும். ஒருபோது கோயிலிலே திருவிழா நடைபெற்றது. கூட்டம் மிகுந்திருந்தது. பலவகையான ஒலிக் கருவிகள் மழையைப்போன்று ஒலித்தன, இறை வழிபாட்டிற்கு வந்த மாதரார் காற்சிலம்பொலிகளும், கூத்தியற்றும் ஆடல்மகளிரின் காற்சிலம்பொலிகளும் கலந்தன. எல்லா ஒலிகளும் சேர்ந்து பெருமுழக்கம் உண்டாக்கிவானத்தில் முகில்கள் இரைந்துகொண்டு மழைபெய்ய வருவதைப் போன்ற நிலைமையை உண்டுபண்ணின.

இத் திருவையாற்றில் எங்கு நோக்கினும் பொழில்கள் மிகுந்திருந்தன. அவற்றிலே குரங்குக் கூட்

டங்கள் இனிது உலாவி நின்றன. குரங்குகளுக்கு மனிதர்களைப்போலத் தெளிந்த அறிவு இல்லை யாகையால், அவை முற்கூறியபடி கோயிலில் உண் டாகிய பலவகையான ஒலிகளையும் கேட்டு அஞ்சின. அச்சத்திற்குக் காரணம் யாதெனின், இவ்வொலி மழை பெய்யவரும் முகில்களின் பேரொலி எனத் தவருகக் கருதிக்கொண்டமையேயாகும். குரங்குகள் மழையில் நனைந்தால் மக்களுக் குண்டாவதைப்போல அவை களுக்கும் ஏதேனும் நோய் வரும். ஆகையால்தான் அக்குரங்குகள் அஞ்சின. அஞ்சியதுமன்றிக் குட்டி களையுடைய சில பெண் குரங்குகள் அம்மழையினுல் தங்கள் குட்டிகள் வருந்துமே யென்று பெரிதுங் கவன்று அப்பொழிலிலே வானளாவ வளர்ந்திருந்த மரங்களின்மீது ஏறி மழை வருகின்றதா என்று வானத் தையும் பார்க்கலாயின.

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட்(டு) ஐம்மேல் உந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்(று)
அருள்செய்வான் அமருங் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென்(று) அஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்கும் திருவை யாறே.

(அ - ரை.) புலன்ஐந்து—மெய் வாய் கண் மூக்குச் செவி. பொறி - வழி. ஐ—கோழை. உந்தி—மேல்நோக்கி வந்து. அலமந்த—சுழன்ற. போது—வேளை. முழவு—மத்தளம் முகில்—மேகம்.

---

## ரு. நண்டு மூறித்தவன்

ஓர் ஊரில் ஒரு தொழுநோயாளன் வசித்துக் கொண்டிருந்தான். ஊர்மக்கள் அவனைக் காணும்போ தெல்லாம் தங்கள் தலையைத் திருப்பிக்கொண்டு போய் விடுவார்கள். அவனை அணுகி ஒரு இரக்கமொழி சொல்லு வோர்கூட இல்லை. அவன் கால் கை முதலிய உறுப் புக்களெல்லாம் அழுகித் தோல்போய் எலும்புகளும் வெளிப்பட்டுச் சங்குபோல் வெண்ணிறமாக விளங்கின. இத்தகைய அஞ்சத்தக்க நோயாளியிடம் அவனுடைய தாய் தந்தையர் மனைவி மக்கள் முதலாயினர்கூட நெருங்குவதில்லை. உணவு முதலியவைகள் கொடுப் பதுமில்லை. சில நாளைக்கு அவனுக்கு ஒன்றுங் கொடாது விட்டுவிடின் அவன் இறந்து தொலைவான். அவனிடம் நாம் நெருங்கினல் நமக்கும் அத்தொழுநோய் பற்றுமென்பது மற்றவர்களுடைய எண்ணம். அவ் வூரில் ஒரு பெரியவர் இருந்தார். அவர் உண்மையான அறிவாளி. உலகில் தோன்றிய உயிர்கள் முற்பிறப்பு வினையை இப்பிறப்பில் நுகருகின்றன. அவைகள் எத் தன்மையுடையனவாக விருப்பினும், நாம் அவை கட்கு உதவி செய்தல் வேண்டுமென்பது இப் பெரியார் கொள்கை. இப்பெரியார் பல வீடுகளிலும் ஐயமேற் றுப் புசிப்பவர். இவர் தாம் பெற்ற ஐயத்தை அத் தொழுநோயாளனிடம் கொண்டுபோய்ப் பாதியை அவன் வாயிலேயே போட்டுத் தண்ணீரும் கொடுப்பார். ஏனெனின், கைவிரல்கள் எல்லாம் அழுகி இற்றுப் போய்விட்டன. இப்பெரியாரின் செய்கையைக் கண்ட சிலர் அவரை அணுகிப் 'பெரியீர்! அத்தொழுநோயாள னிடம் செல்கின்றீர்களே! அந்நோய் தங்கட்கும் பற்றிக்கொண்டால் யாது செய்வீர்கள்? பின்னர்த்

தங்களை யாரும் திரும்பிப் பார்க்கமாட்டார்களே,' என்று கேட்டனர்.

அதற்கு அப்பெரியார், 'இத்தொழுநோயாளன் முற்பிறவியில் நண்டைப் பிடித்து அவற்றின் கால்களையும் கைகளையும் ஒடித்துத் தின்ற தீவினையுடையவன். அதனால்தான் இப்பிறவியில் இந்நிலையிலிருக்கின்றான். உங்களிலும் பலர் இப்பிறவியில் நண்டு முறித்துத் தின்பவர்கள் இருக்கின்றீர்கள். இத்தகைய தொழு நோய் உங்களையும் பற்றுதல் கூடும். அப்பொழுது உங்களை யாருங் கவனிக்காவிட்டால் யாது செய் வீர்கள்? நண்டு முறித்துத் தின்பதால்தான் இத் தகைய நோய் வருமென்பதைப் பெரியோர்களும் கூறி யிருக்கிறார்கள்,' என்றார். பெரியார் கூறியதைக் கேட்ட மக்கள் அஞ்சித் தாங்கள் நண்டு முறிப்பதில்லை யென்று முடிவு செய்துகொண்டு அப்படியே வாழ்க்கை நடத்த லாயினர்.

அக்கேபோல் அங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே—அக்கால்
அலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்.

(அ-ரை.) அக்கு - அக்குமணி. அங்கை - உள்ளங்கை. துக்கத் தொழுநோய் - துக்கத்தைத் தரும் தொழுநோய். அல வன் - நண்டு. காதலித்து - விரும்பி. பழவினை - முற் பிறவியிற் செய்த தீவினை.

---

## சா. சண்டி மாடு

தஞ்சைக்கோட்டத்திலே ஒரு முதலியார் இருந்தார். அவர் ஒரு காளைமாடு வாங்கினர். அது பலவகையான தீனிகளை நன்ருய்த் தின்னும். தினம் இரண்டு போர் வைக்கோலைக்கூடத் தின்றுவிடும். போதாக்குறைக்கு மேல் தீனியாகக் கொள்ளு, புல்லு, பிண்ணுக்கு முதலி யவைகளையும் தின்னும். இவ்வளவு தீனிகளையும் நன்கு தின்று அக்காளைமாடு நன்கு கொழுத்துப் போயிருந் தாலும் வேலைமட்டும் ஒன்றும் செய்யாது. எவ்வித வேலை யும் செய்யாமல் நன்கு தீனி தின்றுவிட்டு ஏய்க்கவேண்டு மென்பதே அக்காளையின் நோக்கம். ஒரு நாள் அம் மாட்டை முதலியார் ஒரு வண்டியிற் பூட்டி ஓட்டிப் பார்க்குமாறு கூறினர். பணியாட்களும் அவ்வாறே ஒரு வண்டியிற் பூட்டி யோட்டினர். உடனே அச்சண்டி மாடு 'தொப்'பென்று கீழே விழுந்துவிட்டது, உடலில் வலியில்லாததைப்போல. இச்சண்டி மாடு தன்னைப் பிடித்து வண்டியிற் பூட்ட வந்தவர்களையே முட்டத் தொடங்கியதாகையால், அச்சத்துடனேயே தூர நின்று எழுப்பிப் பார்த்தனர். என்ன செய்தும் எழுந்திருக்க வில்லை. எட்டாள்கள்வரை பிடித்துத் தூக்கிப்பார்த் தனர் ; தடியால் அடித்துத் தாக்கிப் பார்த்தனர்; மூக்கில் தண்ணீர் மிளகாய்த் தூள் முதலியவற்றைக் கொட்டிப் பார்த்தனர் : வாலைப் பிடித்துப் பற்களால் கடித்து முறுக்கிப் பார்த்தனர். சிறிது கிளம்பிய மாடு அவர்கள் மீது கழிந்துவிட்டு மீண்டுந் 'தொப்'பென்று விழுந்து விட்டது. இக்காளையின் செய்கையைக் கண்டு அங்குக் கூடிய மக்கள் வேடிக்கை பார்க்கவும் ஆயினர். இத் தகைய சண்டி மாடுகள் நாட்டில் கணக்கில்லாம லிருக் கின்றன.

இட்டமுடன் முதலியார் வாங்கிவந்த காளைதினம் இருபோர் தின்னும்
சட்டமுடன் கொள்ளுண்ணும் புல்லுண்ணும் அதைப் பண்டி தன்னிற் பூட்டக்
கிட்டவரின் முட்டவரும் தொட்டவர்மே லேகழியும் கீழே வீழும்
எட்டாள்கள் தூக்கிடினும் தடிகொண்டு தாக்கிடினும் எழுந்திராதே.

(அ-ரை.) இட்டம் - விருப்பம். பண்டி - வண்டி.

---

## எ. கல்வியின் உயர்வு

ஓர் ஊரிலே வெள்ளையன் என்ற பெயருடைய ஒருவன் இருந்தான். அவன் கீழ்வகுப்பென்று தாழ்த்திச் சொல்லப்படுகிற பறையர் வகுப்பைச் சேர்ந்தவன். இவன் முற்பிறவிகளின் நல்வினைப் பயனால் கல்வியறிவு பெறுவதில் மிகுந்த பேரவாக்கொண்டிருந்தான். ஆயினும் அவன் வாழ்ந்திருந்த ஊரிலே தகுந்த கல்வியறிவாளர்கள் இல்லை. எனவே இவன் பழந்தமிழ் நகரமாகிய மதுரைக்குச் சென்றான். அங்கு அந்நாளிலே ஒரு பெரும் புலவர் இருந்தார். அவர் மிகுந்த நுண்ணுணர்வும் தண் அளியும் உண்மை அறிவும் உடையவர். இவர் சீர்த்தி அந்நாளிலே நாடெங்கும் பரவியிருந்தது. ஆகையால், வெள்ளையன் இப்புலவரிடஞ் சென்று தன் எண்ணத்தைக் கூறினான். அப்புலவர் மிக மகிழ்ந்து 'உன்னைப்போல் கீழ் வகுப்பில் பிறந்த ஒருவனுக்குக் கல்வியினிடத்தில் அவாவுண்டானதே மிக வியப்பாகும் நான் உனக்குத் தக்கபடி கல்வி கற்பிக்கிறேன்,' என்று கூறி அவனுக்கு உண்டி உடை முதலியனவும் அளித்து,

மிகக் கருத்துடன் அவனுக்கு இலக்கண இலக்கிய நூல்களை நன்கு கற்பித்தார். சில ஆண்டுகளில் அவன் சிறந்த கல்விமான் ஆனுன். அதன்பிறகு இப்புலவர் பெருமானிடம் உடன்பாடுபெற்றுத் தன்னுடைய ஊரையடைந்து மேலும் மேலும் பல நூல்களை யாராய்ச்சி செய்துகொண்டிருந்தான். அப்போது அவ்வூரினர் சிலர், வெள்ளையனை அழைத்து அவனை ஒரு செய்தியைப்பற்றிப் பேசுமாறு கூறினர். அவன் அவர்கள் கேட்டுக்கொண்ட ஒரு சிறு செய்தியைப்பற்றி இரண்டு நாழிகை நேரம் விளக்கமாகவும், அழகாகவும், கேளாதவர்களும் கேட்க வேண்டுமென்று அவாக்கொள்ளும்படியாகவும் சொற்பொழிவு செய்தான். அன்றுமுதல் அவன்புகழ் அவ்வூரில் மட்டுமன்றிப் பக்கத்திலுள்ள ஊர்களிலும் பரவியது. நல்லறிவுடைய சில உயர்ந்த வகுப்பினர் வெள்ளையனிடம் வந்து கல்வி கற்கலாயினர். இதனைக் கண்டு சிலர், 'இஃதென்ன கூத்து, கீழ் வகுப்பினனிடம் மேல் வகுப்பினர் கல்வி கற்கலாமா?' என்றனர். அதற்கு வெள்ளையனிடம் கல்விகற்போர், "கல்விகற்றவன் உயர்ந்த சாதி, கல்வி கல்லாதவன் தாழ்ந்த சாதி, 'எக்குடி பிறப்பினும் யாவரே யாயினும் அக்குடியிற் கற்ருேரை மேல்வருகென்பர்,' 'கல்லா ஒருவன் குலநலம் பேசுதல் நெல்லினுட் பிறந்த பதரா கும்மே' என்று பலவகையாகக் கூறியிருக்கிருர்கள் அறிஞர்கள். ஆற்றில் தோணிவிடுபவன் தாழ்ந்த குலத்தினனென்று பார்க்கின்ருேமா? அவன் துணைகொண்டு ஆற்றைக் கடக்கவில்லையா? அதைப்போல நன்கு கற்றவனைக்கொண்டு நல்லவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும்," என்றனர். இவர்களிடம் வாய்கொடுத்தோர் வாயடங்கிச் சென்றனர்.

தோணி இயக்குவான் தொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டான் என்றிகழார்—காணாய்
அவன்துணையா ஆறுபோ யற்றேநூல் கற்ற
மகன்துணையா நல்ல கொளல்.

(அ - ரை.) இயக்குவான் - ஓட்டுபவன். தொல்லைவருணம்—பழமையான குலம். அற்றே - அத்தன்மையதே.

---

## அ. உடலை என்செய்தால்தான் என்ன?

செந்தமிழ்மறையாம் திருக்குறளைத் திருவாய் மலர்ந்தருளிய திருவள்ளுவதேவரைப்பற்றி அனைவரும் நன்குணர்வார். அவர் ஓர் உண்மையறிவாளர் என்பதும் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஓர் உண்மை. திருவள்ளுவரின் உயிர் உடலைவிட்டு நீங்கியதும் அப்பெருமான் உடலை நிலத்திற்குள் அடக்கஞ் செய்து மேலே திருக்கோயில் கட்டி வழிபாடு செய்ய வேண்டுமென்பது, திருவள்ளுவருடைய மாணவர் பலரின் நினைப்பு.

திருவள்ளுவதேவர் தம்முடைய மாணவர்களின் உள்ளக்கிடையை நன்குணர்ந்திருந்தார். ஆகவே, அவர் அம்மாணவர்களைப் பார்த்து, 'என்னுடைய உயிர் உடலைவிட்டு நீங்கியவுடன் நீங்கள் என் காலில் ஒரு புரியைக் கட்டி இழுத்துக்கொண்டுபோய் ஊருக்குப் புறம்பே போட்டுவிடுங்கள்,' என்று கட்டளையிட்டார். ஆசிரியரின் கட்டளையைக் கேட்ட மாணவர்கள் மருண்டு, 'அவ்வாறு செய்தல் தக்கதாகுமா? நாங்கள் தங்கள் உடலை அடக்கஞ்செய்து கோயில் கட்டி வழிபாடு செய்ய விரும்புகிறோம்,' என்றனர்.

மாணவர்கள் கூறியதைக் கேட்ட திருவள்ளுவர், 'தோற்பையாகிய இவ்வுடலில் நின்று எல்லாத் தொழில்களையுஞ் செய்து நன்மைப்பயனையும் தீமைப்பயனையும் அடையுமாறு செய்து ஊட்டுகின்ற உயிராகிய கூத்தன் இவ்வுடலை விட்டுப் புறப்பட்டுச் சென்றபின் இவ்வுடலைக் கயிறு கட்டி இழுத்தால்தான் என்ன? அன்றி, நன்றாகக் கழுவி அடக்கஞ் செய்தால்தான் என்ன? அல்லது நிலத்திலுள்ள பள்ளங்களிலோ அல்லது கண்ட இடங்களிலோ போட்டுவிட்டால்தான் என்ன? இவ்வாறு போடப்பட்டுக் கிடப்பதைப் பார்த்துப் பலரும் பழித்து நகைத்தால்தான் என்ன? இவைகளாலெல்லாம் ஒரு வித பயனுமே இல்லை. ஆதலின் அடக்கஞ் செய்து வீணாகத் தொல்லைப்படாமல் நான் கூறியபடியே செய்யுங்கள்,' என்று கூறியருளினார்.

நார்த்தொடுத்(து) ஈர்க்கிலென் நன்றாய்ந் தடக்கிலென்
பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்பட்டக் கால்.

(அ - ரை.) நார்த்தொடுத்து - கயிற்றைக்கட்டி. அடக்கில் - அடக்கம் செய்தால். பார்த்துழி - கண்டஇடம்; நிலத்தின் கண் உள்ள பள்ளமுமாம். தோற்பை - உடல். கூத்தன் - உயிர்.

## ௯. குரங்குகளின் கூத்து

ஒரு மலையிலே குரங்குகள் மிகுதியாக இருந்தன. ஒருநாள் ஒரு குரங்கிற்கு இனிய பெரிய மாங்கனி ஒன்று கிடைத்தது. அஃது அதனை உண்ணத்தொடங்கிய போது அவ்விடத்திற்கு மற்றும் பல குரங்குகள் வந்து சேர்ந்தன. அவைகள் தமக்கும் அந்தப் பழத்திலே பங்கு தரவேண்டுமென்று குறிப்புக்காட்டின. கனி வைத்திருக்கும் குரங்குக்கு அக்கனியில் பங்கு கொடுப்பதற்குச் சிறிதும் விருப்பமில்லை; அப்பொழுது. அக்குரங்குகள் பளிங்குக் கல்லினால் ஆகிய ஓரிடத்தில் இருந்தன. குரங்கு வைத்திருந்த கனியின் நிழல் பளிங்குக் கல்லுக்குள்ளே தெரிந்தது. கனி வைத்திருக்கும் குரங்கு மற்றைக் குரங்குகளுக்கு அந்நிழலைச் சுட்டிக்காட்டி அதனை யெடுத்துக்கொள்ளுமாறு குறிப்புக் காட்டிற்று. அப் பளிங்குக் கல்லினுள் தெரிவது தன் கையிலிருக்கும் பழத்தின் நிழல்தான் என்று இந்தக் குரங்கிற்கும் தெரியாது. மற்றைக் குரங்குகளோ கல்லினுட்டெரியும் நிழற்கனி உண்மைதான் என்றெண்ணி, அதனை யெடுத்தற்குப் பெரும் முயற்சிகள் செய்து தம் கை நகங்கள் கூடத் தேயுமாறு பளிங்குக் கற்களைப் பிறாண்டிக் கொண்டிருந்தன. அப்பொழுது அப் பக்கத்திலே சென்றுகொண்டிருந்த ஒரு பேரறிஞர் குரங்குகளின் மடமையை எண்ணி நகைத்துக்கொண்டே சென்றார்.

கல்லாக் குரங்கு பளிங்கிற் கனிகாட்ட
எல்லாக் குரங்கும் உடனீண்டி—வல்லே
இருக்(கு) உகிரால் கற்கிளைக்கும் ஈங்கோயே மேனி
பொருந்தவராப் பூண்டான் பொருப்பு.

(அ - ரை.) ஈண்டி - நெருங்கி. வல்லே - விரைவாக. உகிர் - நகம். கிளைக்கும் - பிறாண்டும். ஈங்கோய் - திருவீங் கோய்மலை என்னும் திருஇடம். அரா - பாம்பு. பூண் டான் - அணிந்தான். பொருப்பு - மலை.

## கo. கூத்தும் கொடையும்

ஓரழகிய மலையிலே பலவகை நலங்களும் இனிது நிறைந்து இயற்கைக்காட்சி சிறந்தோங்கிற்று. ஓரிடத்திலே காந்தள்மலர் அழகாக மலர்ந்திருந்தது. இந்தமலர் பெண்களுடைய கைக்கு உவமை கூறப்பெறுவது. இம் மலருக்கண்மையில் ஒரு மயில் கண்டார் மகிழும்படி தன்னுடைய அழகு மிக்க தோகையை விரித்துக் களிக் கூத்தாடிக்கொண்டிருந்தது. இவைகட்கு அருகிலேயே கொன்றைமரங்கள் பூத்துத் தம் பூக்களைப் பொன் சொரிவதுபோற் சொரிந்துகொண்டிருந்தன. இந்த இயற்கைக் காட்சி, மயில் கூத்தாடும்படியாகக் காந்தள் தன் மலராகிய கைகாட்டியதைப் போன்றும், கொன்றை தன் மலர்களாகிய பொன்னைக் கூத்துக்குக் கொடையாக அளிப்பதைப் போன்றும் இனிமைபெற விளங்கிக் கொண்டிருந்தன. இத்தகைய இயற்கைக் காட்சிகள், பார்த்தலுக்கும் கேட்டலுக்கும் உவகையூட்டுவன ஆகுமேயன்றி இவற்றின்முன் செயற்கைச் செயல்கள் எல்லாம் ஓரழகும் பொருளும் ஆகுமா? ஒருநாளும் ஆகாதன்றோ? இவ்வியற்கைக் காட்சியைக் கண்டு மகிழ்ந்தவர் யாவரேயோ எனின்? திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளையும் எதிர்த்து நின்றவரெனக் கூறப் பெறும் நக்கிரதேவனார் என்க.

காந்தளங்கை கைத்தலங்கள் காட்டக் களிமஞ்ஞை
கூந்தல் விரித்துடனே கூத்தாடச் - சாய்ந்திரங்கி
ஏர்க்கொன்றை பொன்கொடுக்கும் ஈங்கோயே செஞ்சடைமேல்
கார்க்கொன்றை யேன்றான் கடறு.

(அ - ரை.) காந்தள் அங்கை - காந்தளாகிய அழகிய கை. களி மஞ்ஞை - களிப்புடைய மயில். ஏன்றான் - தாங்கினான். கடறு - இடம்.

---

## கக. திருமாலும் செந்நெல்லும்

காஞ்சி நகரத்திலே ஒரு புலவர் இருந்தார். அவர் இறைவன் திருவிளையாடல்களைக் கூறும் புராண நூல்களை யெல்லாம் நன்கு கற்றவர். திருமால் முதலிற் சிவந்த நிறத்தோடு இருந்ததையும், பாற்கடலில் தோன்றிய நஞ்சினுல் அத்திருமாலின் உடன் கறுத்துப் போனதையும், பின்னர் அத்திருமால் காஞ்சிநகரை யடைந்து இறைவனை வழிபட்டு முன்னையுரு வெய்திய தையும் நூல்களில் படித்திருந்தார். இவர் வயல்களின் பக்கம் சென்றபோது, வயல்களிலுள்ள நெற்கதிர்கள் முன்பு வெண்ணிறமாக வெளிப்பட்டதையும், பின் அவை, பால் முற்றிப் பசுமை நிறத்தை யெய்தியதையும், இறுதியில் நெல்மணிகள் முற்றியபோது செந்நிறத்தை யடைந்ததையும் கவனித்துக்கொண்டு வந்தார். அந் நெற்கதிர்கள் செந்நெற்கதிர்களான தன்மை திருமாலி னுடைய தன்மையைப்போல் இருக்கின்றதென்று அறிந்து மகிழ்ந்ததுடன் அத்தன்மையினைப் பலருக் குங் கூறினுர். இதனைக் கேட்டவர்கள் புலவர் கூற்று அழகாக இருக்கிறதென்று கூறி வியந்து மகிழ்ந்தார்கள். இயற்கையாயமைந்துள்ள பொருள்களிடத்திலும், இத் தகைய காட்சியைக் காண்பது அறிஞருக்கன்றி மற்றை யோர்க்கு முடியாதன்றோ?

பாலொளிநீத் தெழும்விடத்தான் முகில்வண்ணம் படைத்திருந்த
மாலவனுர் கலிக்கச்சி வந்தெய்தித் தவமுஞற்றி
மேலையுருச் சிவந்தென்ன வெள்ளொளிபோய்ப் பசந்தெழுந்த
சாலியெலாஞ் செக்கனக நிறம்வாய்ந்து தழைக்குமால்

(அ - ரை.) முகில் - கார். மால் - திருமால். கலி - ஒலி; செல்வம் என்பாரும் உளர். உஞற்றி - செய்து மேலையுரு - முன்னைய உரு. சாலி - நெல். கனகநிறம் - பொன் நிறம்.

---

## கஉ. வைக்கோல் அடித்தல்

தமிழ்நூல்களைக் கற்கும் இரு மாணவர்கள் வைக்கோல்போர் அடிக்கும் ஓரிடத்திற்குச் சென்றனர். ஆங்குப் பெரிய பெரிய நெற்போர்களைச் சரியச்செய்து கரிய எருமைகளைப் பூட்டி, அப்போர்களைத் துவைப்பித்து வைக்கோலையும் நெல்லையும் வேறு பிரித்துக் கொண்டிருந்தனர். அங்குச் சென்ற மாணவர்களில் ஒருவன் மற்றவனைப் பார்த்து, 'எருமைகளைப் பூட்டி இவ்வாறு நெற்போர் அடித்தலுக்கு ஓர் உவமை கூறு பார்ப்போம்' என்றான். உடனே மற்றவன், அக்காலத்தில் தேவர் தலைவன் பறந்து திரிந்த மலைகளை யெல்லாம் சிறையறுத்து நிலத்தின்மீது தள்ளியதாக நூல்களிற் கூறப்படுகிறதன்றோ? அப்போது தன்னுடைய ஊர்தியாகிய காரினையனுப்பி, மேலும் அம்மலைகளையெல்லாம் துவைத்து மிதிக்கச் செய்து வருத்தினால் எவ்வாறு இருக்குமோ அதைப்போல இருக்கின்றதென்றான். அதற்கு முதல் மாணவன், நானும் இக்கருத்துக்களை மனதில் வைத்துக்கொண்டுதான் கேட்டேன். நீ கூறியது நன்றாகப் பொருந்தும் என்றான்.

வெற்பெலாம் மண்ணின் வீழ்த்து வலாரிதன்
ஒப்பில் ஊர்தியை ஏவி ஒறுத்தல்போல்
பற்பல் போர்கள் சரித்துப் பகட்டினம்
முற்பி ணைத்து நடத்துவர் மொய்ம்பினர்.

(அ - ரை.) வெற்பு - மலை. வலாரி - இந்திரன். ஒப்பில் - இணையற்ற. ஒறுத்தல் - தண்டித்தல். பகட்டினம் - எருமைக் கடாவின் கூட்டம். மொய்ம்பினோர் - வலிமையினை யுடையவர்கள்.

---

## கா. சோறுகண்ட மூளி யார் சொல்?

'இரட்டைப் புலவர்கள்' என்று புகழ்பெற்ற இரண்டு அறிஞர்கள், ஆங்கூர் என்னும் ஊருக்கு இறைவனை வணங்கச்சென்றனர். அக் கோவிலிலே மேள தாளங்கள் முதலிய ஒலிக்கருவிகள் மிகுதியாக ஒலிக்க இறைவனுக்கு வழிபாடு நடந்தது. ஆனல் கோவிலில் வழிபாடு செய்யும் பணியாளர்கள், அரிசி போட்டுச் சோறு பொங்கிப் படைக்காது, இரு செங்கற்களை நன்கு சுடவைத்து அவைகளைத் தட்டிலே வைத்து அவற்றின்மேலே ஈரத்துணியைப் போட்டு மூடி (இவ்வாறு செய்தால் புகை எழும்பும்) இறைவனையும் ஏமாற்றிக்கொண்டிருந்தனர். இச்செய்தி இரண்டு அறிஞர்களில் ஒருவருக்குத் தெரிந்துவிட்டது. எப்படித் தெரிந்ததென்றல், வழிபாட்டின்போது தட்டு வைத்திருந்தவர் துணியைச் சிறிது விலக்கிக் காட்டினர்; அப்போது தெரிந்துவிட்டது. ஆயினும், அவர் அச்செய்தியை மற்றவருக்கு உடனே கூறவில்லை. வழிபாடு முடிந்தபிறகு இரு புலவரும் ஓரிடத்தில் சென்று அமர்ந்தனர். அப்போது அவர்களுக்குப் பசியுண்டாயிற்று. ஒரு புலவர்; 'சிவனே! நாங்கள் பசித்திருப்பது நியாயமோ,' என்ருர். இறைவனே சோற்றைக் காணுத தன்மையைக் கண்ணுரைக் கண்ட மறுபுலவர், "சங்கு, முரசு முதலிய கொட்டோசைகளைத் தவிரச் சோற்றைக் கண்டவர் இங்கு யார் இருக்கின்றனர்?" என்று இறைவன் கூறிய பதிலாக விடையிறுத்தார். இதன் பிறகு தான் கோவிலில்நடந்த சூழ்ச்சி முதற் புலவருக்குத் தெரிந்தது.

தேங்குபுக ழாங்கூர்ச் சிவனேயல் லாளியப்பா
நாங்கள் பசித்திருக்கை ஞாயமோ—போங்காணும்
கூறசங்கு தோல்முரசு கொட்டோசை யல்லாமல்
சோறுகண்ட மூளியார் சொல்.

(அ - ரை.) தேங்குபுகழ் - நிறைந்த புகழ்.

---

## கச. மூங்கிலின் உயர்ச்சி

ஒரு பெரிய மலையின்மீது மூங்கில் காடுகள் ஞாயிற்றுமண்டலம்வரை உயர்ந்தோங்கி வளர்ந்து நின்றன. அம்மலையிலுறைந்துள்ள யானைக்கூட்டங்கள், அம்மூங்கிற் காட்டிற்குச் சென்று, அம்மூங்கிலை வளைத்து அதிலுள்ள தழைகளைத் தின்றுகொண் டிருந்தன. தழை முழுவதும் முடிந்ததும் அந்த யானை கள் தாம் வளைத்துப் பிடித்திருந்த மூங்கிலின் பிடியை விட்டுவிட்டன. நிமிர்ந்த மூங்கில் மிகு விரைவாக மேலெழுந்தது. அப்பொழுது கதிரோனாகிய ஞாயிற் றின் தேர் உச்சிவானில் வந்துகொண்டிருந்தது. யானைக ளால் வளைப்பில் நின்றும் விடப்பட்ட மூங்கிலில் ஒன்று திடீரென நிமிர்ந்தபோது கதிரோனின் தேர்க் குதிரைகளின்மேல் நன்கு அடித்துவிட்டது. இவ் விதம் மூங்கிலால் அடிபட்டமையை உணராத குதிரை கள், விரைந்து செல்லுமாறு தம்மை அருணன்தான் குதிரைச் சாட்டையால் அடித்தான் என்று தவறாகக் கருதி மேலும் விரைந்து ஓடத்தொடங்கின. அரு ணனோ தன்னுடைய வேலையை அம்மூங்கில் மரஞ் செய்தபடியால் தான் சிறிதுபோது களைப்பாறுபவனாக வாளாவிருந்தான்.

காம்பரி முரண்மும் மதகரி விளைத்த
கைவிட மோதலாற் கதிர்த் தேர்த்
தாம்பரி நுணுக்கென் றீர்த்திடுஞ் சோண
சைலனே கைலை நாயகனே.

(அ - ரை.) காம்பு அரி - மூங்கில் செறிவு. முரண் - வலிமை. தாம்பரி - தாவிச்செல்லும் குதிரை. ஈர்த்திடும் — இழுக்கும்.

---

## கரு. புறாக்களின் தோல்வி

ஒருகாலத்தில் புறாக்கூட்டம் ஒன்று முதன்முதலாகப் பாலைநிலத்தை யடைந்தன. அப்பொழுது அங்கு வேடப்பெண்களாகிய எயிற்றியர் வாழ்ந்திருந்தனர். அவர்களைக் கண்டன புறாக்கள். அப்பெண்களுடைய அழகு மிகச் சிறந்ததாக இருந்தது. தம்மைப் பார்க்கிலும் அவ்வேட்டுவப் பெண்கள் மிகுந்த பேரழகோடு விளங்குதலைக் கண்டதும் புறாக்களுக்கு மிகுந்த நாணம் உண்டாகிவிட்டது. நாம் இவ்வழகிய பெண்களுக்கு அருகில் வாழ்ந்திருப்பது மிக இழிவாகும். ஆதலின் வேற்றிடம் சென்றுவிடுவோமென்று எண்ணிப் பக்கத்திலேயிருந்த பொழிலிலே நுழைந்தன. அங்கு குரா மரத்தின்கீழ் அம்மரத்தின் காய்கள் பாவை போன்று கிடந்தன. அவை அம்மரத்தின் காய்கள் என்பதை அறியாத புறாக்கள், அவ்வேடப் பெண்கள் தாம் அங்கும் வந்து தம் மகவினைஉறங்கவைத்திருக்கின்றனர் இங்கிருப்பின் அவர்கள் இங்கும் வருவர்: அல்லது இம்மகவுக்கும் தோற்கும்படியாக இருக்கும், ஆதலின், யாது செய்வோம் என வருந்தியவைகளாக அவ்விடத்தையும் விட்டு அகன்று அப்பாற் சென்று, வெயிலிலே நின்று வருந்திக் கலங்குவன ஆயின.

எயிற்றி மார்எழில் நலத்தினுக்(கு) இரியல்போய் உடைந்தாங்(கு)
அயற்பொ தும்பர்புக்(கு) அலர்குராப் பாவைகண் டவர்தம்
துயிற்று சேயெனக் கவன்றபோய்த் தூதுணம் புறக்கள்
வெயிற்ற லேக்கண்ணின்(று) உயங்குவ நிலைமைவிண் டவர்போல்

(அ - ரை.) எயிற்றிமார் - வேடப்பெண்கள். எழில் - அழகு. இரியல்போய் - தோற்றுப்போய். அயல்பொதும்பர் - பக்கத்திலுள்ள சோலை. அலர் - மலர்ந்துள்ள. துயிற்று - உறங்கவைத்துள்ள. சேய் - குழந்தை. கவன்று - வருந்தி. உயங்குவ - வருந்துவ.

---

## கரு. இயற்கை மணக் காட்சி

ஒரு பொழில். அப்பொழிலில் பலவகையான மரங்கள் மலர்ந்திருந்தன. வண்டுகள் தேனுண்டு இசை பாடின. குராமரத்தின் காய் பதுமைபோலக் கிடந்தது; அது மணமகள்போலக் காணப்பட்டது. அதன் பக்கத்திலே கோங்க மரத்தின் பூக்கள் மலர்ந்து கிடந்தன. அவை அப்பெண்ணுக்குக் கொடுத்த பொன்னைப்போன் றிருந்தன. பாதிரியின் சிவந்த மலர் இவைகட்கருகில் மலர்ந்து பரவியிருந்தது; அது திருமணத்தின் வேள் வித்தீயைப் போன்றிருந்தது. அங்குப் பாடிக்கொண் டிருந்த வண்டுக்கூட்டங்களின் இசையோ திருமணக் காலத்தில் செய்யப்பெறும் இசை முழக்கத்தை யொத் திருந்தது. இந்த இடங்களிலெல்லாம் பரவிக்கிடந்த முருங்கையின் வெள்ளிய மலர்களோ திருமணத்தின் போது இறைக்கப்பெறும் நெற்பொரியைப் போன் றிருந்தது. இங்கு மணமகன் யாரென்றால் கோங்கு மரந்தான். திருமணத்தில் செய்யப்பெறுஞ் செயல் களைத் தவிர மற்றவைகளெல்லாம் பொருத்தமுற அமைந்திருப்பது பெருவியப்பன்றோ?

குரா வளித்திடு பாவையைக் கோங்குபொன் கொடுத்துப்
பாரரைப் பாடலம் பூந்தழற் பாங்கரின் மணப்ப
மராம ரத்துளர் வண்டுபண் பாடவன் முருங்கை
விராவி வெண்பொரி இறைத்திடும் வியப்பின தொருபால்.

(அ - ரை.) குரா - குராமரம். பாவை - பாவையைப்போன்ற காய். பாரரை - பருத்த அடி. பாடலம் - பாதிரி. பாங்கர் - பக்கம். உளர் - அசையும். விராவி - கலந்து.

---

## கஎ. புலியின் மருட்சி

ஒரு மலையில் ஒரு முழை இருந்தது. அம்முழையில் ஒரு புலி வாழ்ந்திருந்தது. ஒருநாள் அப்புலி இரை தேடும்பொருட்டு வெளியே சென்றிருந்தது. அப்பொழுது ஒரு பாம்பு அம்முழைக்குட் சென்று சிறிது நேரம் படுத்திருந்தது. அது வெளியே செல்லும்போது தன்னுடைய ஒளி மிகுந்த பெரிய மணியை உள்ளே கக்கிவிட்டுச் சென்றுவிட்டது. அம் மணி மிகுந்த பேரொளியை உடையது. அவ்வொளியால் முழையின் உள்ளிடமெல்லாம் ஒளிபொருந்தி விளங்கியது. இத்தகைய மணிகள் சிலவகையான பாம்புகட்கு உண்டு. பாம்புகள் இவைகளைக் கக்கிவைத்து இம் மணியொளியில் இரைதேடி யுண்பது வழக்கம்.

வெளியே சென்று திரும்பிய புலி, தன் முழை வாயிலுக்கு வந்து உள்ளே பார்த்தது. உள்ளே ஒளிசெய்திருப்பது பாம்பின் மணியென்று புலிக்குப் புலப்படவில்லை. முழைக்குள் எப்படியோ தீ வந்துவிட்டதென்று அது மாறுபாடாகக் கருதிவிட்டது. தீயைக் கண்டால் புலிகளுக்கு மிகுந்த அச்சம். ஆகையால் புலி உள்ளே செல்லாது யாது செய்வதென்று கலங்கி அவ்விடத்தை விட்டு ஓட்டம் பிடித்தது.

முருக்கும்அங் கதமா மணியுமிழ்ந் தகன்ற
முழைதழற் றெனவுளம் வெருவித்
தருக்கும்ஒண் புலிசென் றுறமருள் சோண
சைலனே கைலநா யகனே.

(அ - ரை.) முருக்கும் - கெடுக்கும். அங்கதம் - பாம்பு. தழற்று - தழலையுடையது. வெருவி - அஞ்சி. தருக்கும் - செருக்கும். மருள் - மருளுகின்ற.

---

## கஅ. அதிகாரியின் அடக்கம்

ஒரு பட்டினத்தில் ஓர் அதிகாரி இருந்தார். அவர் நீதிநூல்கள் பலவற்றையும் நன்கு கற்றிருந்தார். கற்றிருந்தது மட்டுமன்று. கற்றபடியே ஒழுகியும் வந்தார். எல்லோரிடமும் இருக்கவேண்டிய அடக்கம் இவரிடம் நன்கு அமைந்திருந்தது. தாம் வழியிலே செல்லுங் காலத்தில் நல்லறிஞர்கள், துறவிகள், சுமைதூக்கியுள்ளோர், நோயாளிகள், தமக்கு மூத்தவர்கள், இளையவர்கள், ஆண் பெண்கள் என்று சொல்லப்பட்ட இத்தகையினர் எதிர்ப்பட்டால், விலகிப்போகுந் தொல்லையை அவர்கட்கு வைக்காமல் தாமே விலகிப்போய்விடுவார். தம்மைப்போல் வழியிற் செல்வாருக்கு மட்டுந்தான், அவர் விலகாமல் அவர்கள் விலகிப் போகட்டும் என்னும் எண்ணத்துடன் நேரே இறுமாப்புடையவர் போல் செல்வார். இவருடைய இத்தன்மையை யறிந்த சிலர் இவரையடுத்துத், "தாங்கள்தாம் ஒரு பெரிய அதிகாரியாயிற்றே; தங்களைக் கண்ட மாத்திரத்திலே தான் மற்றவர்கள் விலகிப் போய்விடுவார்களே; அவ்வாறாக நீங்களேன் விலகிச் செல்லுகிறீர்கள்?" என்று கேட்டனர். அதற்கு அவ்வதிகாரி, "அறிஞர்கள், துறவிகள், சுமையுடையோர், நோயாளிகள், பெரியோர், சிறி

யோர், ஆண் பெண்கள் முதலியோருக்கு நாம் வழிவிட்டுச் செல்லவேண்டியதுதான் ஒழுங்காகும். அவ்வாறு வழி விட்டுச் செல்வோர் நலம் பல பெறுவர். இஃது அற நூல் உரைத்த முறையாகும்," என்று விடையளித்தார். இவரிடம் கேள்விகேட்டோர் இவருடைய பெருந்தன் மையைப் பாராட்டிச் சென்றனர்.

பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்றிவர்கட்(கு)
ஆற்ற வழிவிலக்கி னாரே பிறப்பிடைப்
போற்றி எனப்படு வார்.

(அ - ரை.) தவர் - துறவிகள். சுமந்தார் - தலைச்சுமை யுடையோர்.
ஆற்ற - மிகவும். விலக்கினர் - விலகினர்.

---

## ௧௧. பறவை வளர்த்த பலன்

ஒரு மனிதன்மீது களவு செய்ததாக வீண்பழி சுமத் தப்பட்டது. அவனுடைய குற்றத்தைப்பற்றி விசா ரணை நடத்திய நீதித்தலைவர் ஊர்காவலாளரின் பொய் யுரைகளை நம்பி அவனுக்குக் காவல் தண்டனை விதித்து விட்டார். அவன் காவற்கூடத்திலே இரும்புவிலங்கு மாட்டப்பெற்றுப் பெருந்துன்பப்பட்டான். பகலில் வயல்களிலே கரும்பு நெல் முதலியன சாகுபடி செய்த லுக்கு உழுவதற்காக, மாடுகளுக்குப் பதில் இவனையும் இவன்போன்றோரையுமே ஏரில் கட்டிக் காவற்கூட அதி காரிகள் வேலை வாங்கினர். வேலைசெய்யும்போதுகூட அவர்களுடைய கால்விலங்கை அவிழ்த்து விடுவதில்லை. அவிழ்த்துவிட்டால் அவர்களை ஏய்த்துவிட்டு ஓடிவிடு வார்கள் என்பது சிறைக்காவலரின் எண்ணம். இவ்

வாறு நீண்டநாள் தொல்லைப்பட்ட பின்பு அவனுடைய தண்டனைக்காலம் முடிவடைந்தது. அவனை விடுதலை செய்துவிட்டார்கள்.

விடுதலைபெற்றவன் தான் ஒரு குற்றமும் செய்யாதிருக்கும்போதே ஒழுங்கற்ற முறையில் தண்டிக்கப் பட்டதை எண்ணிப் பெரிதும் வருந்தினன். பிறகு ஒரு பெரியவரை யடுத்துத் தான் அடைந்த தொல்லைகளை யெல்லாங் கூறித் "தான் வீணுகத் தண்டிக்கப் பட்டதற்குக் காரணம் யாது?" என்று கேட்டான். அப்பெரியவர் உண்மையான பேரறிவு பொருந்தியவர். இறைவன் திருவருளை நன்கு பெற்றவர். இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் முக்காலங்களின் நிகழ்ச்சியையும், அறிவுக்கண்ணுலே காணக்கூடிய ஆற்றல் பொருந்தியவர். அவர் தமது அறிவுப் பார்வையாலே அவனுடைய முக்கால நிகழ்ச்சிகளையும் பார்த்துத் தெரிந்துகொண்டார். பிறகு அவர் அவனைப் பார்த்து "அன்பனே! நீ வருந்துவதிற் சிறிதும் பயனில்லை. நீ அரசினரால் ஒறுக்கப்பட்டது நியாயந்தான்; ஏனெனின், நீ முற்பிறவியிலே, காட்டிலே இயற்கையாகத் திரிந்துகொண்டிருந்த காடை, கௌதாரி, கிளி, மயில் முதலிய பறவைகளைப் பிடித்துக் கூட்டில் அடைத்து வளர்த்ததுடன், அவைகள் வெளியே ஓடிப் போகாதபடி அவற்றின் கால்களையும் கட்டிவைத்தாய். அத்தீவினை தான் உன்னை இப்பிறவியிலே காவற்கூடத்தில் அகப்பட்டு வருந்தச் செய்தது," என்ருர். அப்பொழுது தான் பறவை வளர்த்தது தனக்கு அத்தகைய தொல்லையை இப்பிறவியில் அளித்ததென்றுணர்ந்து பறவை வளர்த்ததற்காக வருந்தினன்.

இரும்பார்க்கும் காலராய் எதிலார்க்(கு) ஆளாய்க்
கரும்பார் கழனியுட் சேர்வர்—சுரும்பார்க்கும்
காட்டுளாய் வாழும் சிவலும் குறும்பூழும்
கூட்டுளாய்க் கொண்டுவைப் பார்.

(அ - ரை.) ஆர்க்கும் - ஒலிக்கும். எதிலார் - பகைவர். சுரும்பு - வண்டு. சிவல் - கவுதாரி. குறும்பூழ் - காடை.

---

## உ0. கம்பளி மூட்டைக் கதை

ஓராற்றின் கரையிலே சிலர் நின்று பேசிக்கொண்டிருந்தனர். அப்பொழுது ஆற்றிலே வெள்ளம் மிகுதியாகச் சென்றுகொண்டிருந்தது. அவ்வெள்ளத்தில் ஒரு கரடி அடிபட்டு வந்துகொண்டிருந்தது. அது தன்னுடைய தலையைக் கால் மறைவிலே நுழைத்துக்கொண்டிருந்தது. அதனால் அது மேற்பார்வைக்கு ஒரு கம்பளி மூட்டையைப்போல் தெரிந்தது. கரையில் நின்றிருந்தவர்களில் ஒருவன் கம்பளிமூட்டை வெள்ளத்தில் அடிபட்டு மிதந்து வருகிறதென்றான். நீந்தத் தெரிந்த மற்றொருவன் நீரிற்குதித்து நீந்திப்போய் அம்மூட்டையைப் பிடித்துக் கரையைநோக்கி இழுத்தான். தலைமறைவாக வந்த அந்தக் கரடியானது, தன்னை வந்து பற்றியிழுத்தவனுடைய தலையை உறுதியாகப் பற்றிக்கொண்டது. கரடியும் மனிதனும் நீரில் மூழ்கியும் வெளிப்பட்டும் அல்லற்படுவதைக் கரையிலே நின்றவர்கள் பார்த்துக்கொண்டிருந்தனர். ஆற்றில் வந்தது கரடிதான் என்று அவர்களுக்கு நன்கு தெரியவில்லை. அம்மூட்டையைப் பிடித்து இழுத்துக் கரைக்குக் கொண்டுவர முடியாமல் அம்மனிதன் தத்தளிக்கிறான் என்பது மட்டும் தெரிந்தது. உடனே இவர்

கள். நீரில் தொல்லைப்படுபவனைப் பார்த்துக், 'கம்பளி மூட்டையை விட்டுவிட்டு வந்துவிடு. அது நமக்கு வேண்டாம்,' என்றார்கள். அதற்குக் கரடியிடம் ஆற்று நீரில் சிக்கிக்கொண்டவன், 'கம்பளி மூட்டையை நான் கைவிட்டுவிட்டேன். கம்பளி மூட்டை என்னைக் கைவிடவில்லை,' என்று ஓங்கிக் கூவினான். அவனால் அக்கரடியிடம் இருந்து விடுபட்டுவர முடியவில்லை. பேராசையின் பலனாக வீணே இறந்தொழிந்தான்.

ஆற்றின் கரைமேல் ஐந்துபேர் நின்றார்கள்
நிரம்பிய வெள்ளத்தில் கரடி யானது
தலையைக் கால்சந்தில் வைத்துக் கொண்டு
மிதந்து வருவதைக் கண்டு
கம்பளி மூட்டை என்று கருதினோரில்
ஒருவன் நீந்திப்போய் அதைக் கைப்பற்றவும்
தலைமறைவாக வந்த கரடி யானது
மனிதனுடைய தலையைப் பற்றிக் கொள்ள
இவனும் அதுவும் மூழ்கி யெழுந்து
வருத்தப்படும்போது
கரையில் நின்ற நால்வரும்
கம்பளி மூட்டையைக் கைவிட்டு வந்துவிடென்னக்
கம்பளி மூட்டையை நான் கைவிட்டு விட்டேன்
கம்பளி மூட்டை என்னைக்
கைவிட இல்லை என்று
ஓங்கிக் கூவி உயிரி ழந்தான்.

———

## உக. அலைநீரும் மரைமலரும்

ஒரு குளத்தில் செந்தாமரை மிகுந்து மலர்ந்திருந் தது. அக்குளம் மிகப் பெரிதாகலின் அடிக்கடி அலை வந்து கரையில் மோதும். அலைவரும்போதும் போம் போதும் நீரிலே மூழ்கிமூழ்கித் தாமரை மலர்கள் வெளிப் பட்டுக்கொண்டிருந்தன. அக் குளத்திலே அழகிய மாதர்கள் பலர் நீராடிக்கொண்டிருந்தனர். மங்கையர் முகஞ் செந்தாமரை மலரைப்போன்றதென்று அறிஞர் களால் ஒப்புக் கூறப்பட்டிருக்கிறது. செந்தாமரை மலர் நீரில் மூழ்கிமூழ்கி வெளிப்பட்டுக் கொண்டிருப் பதைக் கண்ட மாதர்கள், ‘தாமரைமலர்கள் தங்க ளுடைய முக அழகிற்குத் தோற்று நாணமடைந்து தங்களுக்கு முன்னாலே நிமிர்ந்து நிற்பதற்கு நாணி அடிக்கடி நீரிலே மறைந்து மறைந்து வெளிப்படுகின் றவற்றைப்போல இருக்கின்றன!’ என்று பேசிக்கொண் டார்கள். அப்போது அங்கு நீராடுதற்குச் சென்ற ஒரு புலவர், அவர்கள் கூற்றுத் தகுதியானதுதான்என்று எண்ணி வியந்து, தாம் அதை ஒரு பாவாகச் செய்து வைத்தார்.

தள்ளி யோடி அலைதடு மாறலால்
தெள்ளு நீரின் முழுகுசெங் தாமரை
புள்ளி மானனை யார்முகம் போல்கிலா(து)
உள்ளில் நாணி ஒளிப்பன போன்றவே.

(அ - ரை.) தெள்ளுநீர்-தெளிந்த நீர். நாணி - நாணத்தையடைந்து.

——

## உஉ. பெரியோர் பெருமை

ஓரிடத்தில் இரண்டு இளைஞர்கள் எதிர்ப்பட்டுப் பேசிக்கொண்டிருந்தனர். ஒருவன் மற்றவனைப்பார்த்து, 'சிறியோர் பெரியோர்களைச் சேர்ந்தால் பெரியோர் தன்மையை அடையலாமென்று நூல்கள் கூறுகின்றனவே! அவ்வாறே பெரியோர்கள் சிறியோர்களைச் சேர்ந்தால் சிறியோர்களாகி விடுவார்களா? அல்லது பெரியோர்களாகவே தாம் இருப்பார்களா?' என்று கேட்டான். அதற்கு மற்றவன் 'சிறியோர்களாகிவிடமாட்டார்கள். சிறியோர்களையும் பெரியோர்களாகச் செய்து தாங்களும் பெரியோர்களாகவே இருப்பார்கள்' என்ருன். 'அஃதெவ்வாறு கூடும்?' என்ருன் முதலில் கேட்டவன். அதற்கு மற்றவன், 'பொன்னுல் செய்த உருளைகள் அமைந்த தேர் தான் செல்லும் வழியிலுள்ள கருங்கற் பாறைகளினிடத்திலேயும் தன்னுடைய உருளையில் உள்ள பொன்னின் பொடியை உதிர்த்து அக்கருங்கற்களையும் பொன்கற்களைப்போல் செய்துவிட்டுத் தாமும் பொன் உருளைகளாகவே இருக்கும். அதைப்போல,' என்ருன். பதிலைக் கேட்ட முதல் இளைஞன் 'ஆ! ஆ!! அப்படியா?" என்று வியந்தான்.

தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவர் எனும்இது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுருள் உரைத்துரைத்(து) ஓடி
இருண்ட கல்லையும் தன்னிற மாக்கிய இரதம்.

(அ . ரை) தெருண்ட - தெளிவான அறிவினை உடைய. மேலவர் பெரியோர். மருண்டதன்மை - அறிவிலாச் சிறு தன்மை. வாய் - இடம். இருண்ட கல் - கரிய கல்.

---

## உ௯. கல்லாதவனும் நாயும்

கல்விமாநகர் என்னும் ஊரிலே ஒரு பேரவை கூடி யிருந்தது. அவ்வூரினர் அனைவரும் தங்கள் ஊர்ப் பெய ருக்கேற்ப நன்னூல்கள் பலவற்றைக் கற்றுத் தேர்ந்த நுண்ணறிவாளர்கள். அவ்வவைக்கண் கூடியிருந்தார் அனைவரும் விழுமிய அறிஞர்களே; அவ்விதமான பேரவைக்கு ஒரு செல்வன் வந்திருந்தான். அவன் பொருட் செல்வமுடையவனே தவிரக் கல்விச்செல்வம் உடையவன் அல்லன். அவன் அவ்வூர்க்காரனும் அல்லன். பக்கத்து ஊரிலேயிருந்து வந்தவன். அவன் பொருட்செல்வத்தைத்தான் பெரிதாக எண்ணினனே தவிரக் கல்விச் செல்வத்தை ஒரு பொருளாக எண்ணி னவன் அல்லன்.

இத்தகைய தன்மை பொருந்திய அவன், அறிஞர் களின் கூட்டத்திலே புகுந்து மிக மதிப்பாக உட்கார்ந் திருந்தான். கூடியிருந்த அறிஞர்கள் கல்வியைக் குறித் துப் பல செய்திகளை ஆராய்ச்சிசெய்து பேசிக்கொண் டிருந்தார்கள். எல்லோரும் பேசிக்கொண்டிருக்கும் போது நாம் மட்டும் பேசாதிருப்பது அழகாகாது. நாமும் ஏதேனும் இடையிடையே சொல்லிக்கொண் டிருப்போம். எல்லோரும் பேசிக்கொண்டிருக்கும் போது நாம் ஊமையைப்போல் இருந்தால் இழிவாக எண்ணிவிடுவார்கள் என்று துணிந்தவனாய், எவ்வித மான தொடர்பும் இல்லாமலே அடிக்கடி பேசிக்கொண் டிருந்தான். இவனது அறிவின்மையைக் கண்டு பலரும் நகைத்தனர். ஆனால், அச்செல்வன் தன்னை இகழ்ந்து நகைக்கிறார்களென்பதை அறியாதவனாய், நாம் கூறிய தைக் கேட்டு மகிழ்கிறார்கள் என்று எண்ணி அறிவின்

மையால் மேலும் மேலும் மடத்தனமாகவே பேசிக் கொண்டிருந்தான். அறிஞர் கூட்டத்தால் அவனுடைய வெறும் பேச்சை மேலும் பொறுக்கமுடியவில்லை. கூட்டத்தில் இருந்த அறிஞர்களில் ஒருவர் சினம் மிகுந் தவர். அவருக்குச் சினம் ஏற்பட்டது. அவர் அச்செல் வனைப் பார்த்து, "ஓ நாயே! வீணாக ஏன் குரைக் கின்றாய்? உன்னால் சும்மா இருக்கமுடியாதா? உன் னுடைய மடத்தனத்தை எங்களால் பொறுக்க முடிய வில்லையே," என்றார்.

செல்வனுக்கும் சினம் பொங்கிற்று. அவன் அவ் வறிஞரைப் பார்த்து, "என்னை 'நாய்' என்கிறீரே! நான உம்முடைய வீட்டு எச்சில் இலைக்கா வந்து காத்துக் கிடக்கிறேன்! யாரைப் பார்த்து இவ்வாறு கூறினீர்?" என்று உறுமினன். அதற்கு அவ்வறிஞர் அச்செல்வ னைப் பார்த்து, "நீ வீணாக வெகுளுவதில் சிறிதும் பய னில்லை. நூல்களைக் கற்று அறிவுபெறாத ஒரு மூழ மகன் அறிஞர் கூட்டத்துக்குள் புகுந்து அவர்களுக்கு நடுவே இருந்தானாயினும், அவ்வாறிருத்தல் ஒன்றினால் மட்டும் எவ்வாறான பெருமையும் அவனுக்கு வந்து விடமாட்டாது. அவன் அவ்வாறிருப்பது மக்கட் கூட் டத்தின் இடையே நாய் புகுந்து உட்கார்ந்திருப்பதைப் போன்றுதான் இருக்கும். இருப்பவன் வாளா இராது ஏதேனும் பேசினான் ஆயினும் அதுவும் நாய் குரைப் பதைப் போன்றுதான் இருக்கும். இதில் எட்டுணை யேனும் ஐயமில்லை; ஆதலின் நீ யான் கூறியதைக் கேட்டு வெகுள வேண்டியதே இல்லை," என்று கூறி னார். மற்றையோரும் அவ்வறிஞர் கூறியது முறைதான்; அதில் ஒன்றும் தவறில்லை; நீ வீணாகக் கவலவேண்டா மென்று ஆறுதல் கூறினர். அச்செல்வனுக்கோ ஏற

பட்ட இழிவும் வெகுளியும் வருத்த அவன் அவ் அவையை விட்டு விரைந்து வெளியே சென்றுவிட்டான். எனவே, அறிஞர் அவைகட்குக் கல்வி யறிவில்லாதார் சென்றால் ஒதுங்கி வாளாவிருந்து மீளவேண்டுமென் பதும், இன்றேல் ஏதேனும் இழிவு நேரிடும் என்பதும் இதனால் பெறப்படுகிறதன்றோ?

கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு—மெல்ல
இருப்பினும் நாயிருந் தற்றே இரா அ(து)
உரைப்பினும் நாய்குரைத் தற்று.

(அ - ரை.) கல்லாது—நூல்களைப் படியாது. நீண்ட—வளர்ந்த. இடைப்புக்கு — நடுவே புகுந்து. அற்றே—அத்தன்மைத்தே.

---

## ௨௪. புறங்கூறிய புல்லன்

சங்கபுரம் என்னும் ஓர் ஊரிலே கொங்கணநாதன் என்ற பெயருடைய ஒருவன் இருந்தான். இவன் பெரிய வாயாடி. எப்பொழுது பார்த்தாலும் 'சள சள' என்று பேசிக்கொண்டே யிருப்பான். எதுவும் பேசுவதற்குச் செய்தியில்லாதபோது இல்லாதவைகளையும் பொல்லாதவைகளையும் கற்பித்துக் கதைகட்டி விடுவான். இதனால் சமயத்தில் பெருங்கலகங்கள்கூட நேரிடுவதுண்டு. கொங்கணநாதன் பலபேர்களைப்பற்றி இவ்வாறு கூறி அடிகள்கூடப் பெற்றான். ஆயினும் அவனுக்கு அறிவு வரவில்லை.

அவ்வூரிலே ஒரு பேரறிஞர் இருந்தார். அவர் பல நூல்களையும் வழுவறக் கற்றுச் சீர்த்திபெற்றவர். கற்றபடி ஒழுகுவதாலும் அவருடைய புகழ் குன்றிலிட்ட

விளக்கென எங்கும் விளங்கியது. இப்பேரறிஞர் ஒரு நாள் ஒரு தெருவிலே ஏதோ ஒரு வேலையாகச் சென்று கொண்டிருந்தார். அத்தெருவின் மூலையிலே ஒரு கள்ளுக்கடை யிருந்தது. ஆனால் அறிஞருக்கோ அங்குக் கள்ளுக்கடை இருப்பதுகூடத் தெரியாது. இவர் அத்தெருவிலே போய்க்கொண்டிருக்கும்போது கொங்கணநாதன் அவரைப் பார்த்தான். மறுநாள் ஒருவரிடத்திலே கொங்கணநாதன், 'நான் புலவரைக் கள்ளுக்கடைத் தெருவிலே கண்டேன்,' என்று ஒரு செய்தியைச் சொல்லிவிட்டான். இச்செய்தியைக் கேட்டவன் இன்னொருவனிடஞ் சென்று, 'கொங்கணநாதன் புலவரைக் கள்ளுக்கடையருகிலே பார்த்தானும்,' என்று சிறிது கூட்டிச் சொல்லிவிட்டான். அவன் வேறொருவனை எதிர்ப்பட்டபோது, 'கொங்கணநாதன் புலவரைக் கள்ளுக்கடையிலே பார்த்தானும். இச்செய்தி ஊரெல்லாம் அடிபடுகிறது,' என்று மேலுஞ் சிறிது கூட்டிச் சொல்லிவிட்டான். இச்செய்தி மிகுவிரைவில் சங்கபுரம் முழுவதும் 'புலவர் கள்ளுக் குடித்தாராம்,' என்று மாறிப் பரவிவிட்டன. ஒவ்வொருவரும் இச்செய்தியைக் கொங்கணநாதன் கூறியதாகவே கூறினர். இறுதியில் சிலர் புலவரைக் கண்டு, தாங்கள் கள்ளுக் குடிக்கிறதாக ஊர்முழுவதுஞ் செய்தி யடிபடுகிறதே! அஃது உண்மைதானு?' என்று கேட்கலாயினர்.

புலவர் அவர்களுக்குப் பதிலொன்றுங் கூருது, நேரே அரசனிடஞ் சென்று, 'நான் கள் குடிப்பதாகக் கொங்கணநாதன் ஊர்முழுவதும் பொய்யுரை கூறி எனக்கு இழிவை விளைவிக்கிருன். அவனைக் கூப்பிட்டு உசாவ வேண்டும்,' என்ருர். அரசன் அப்புலவர்மீது மிக மதிப்பு வைத்திருந்தான் ஆதலின், கொங்கண

நாதனை உடனே வரவழைத்து உசாவலானுன். கொங்கணநாதனே தான் அவ்வாறு கூறவில்லை என்றும், அந்தத் தெருவிற் பார்த்ததாகத்தான் கூறினேன் என்றும் சொன்னுன். மற்றவர்களையும் அழைப்பித்து உசாவியபோது ஒவ்வொருவரும் கொங்கணநாதன் 'புலவர் கள் குடித்தார்,' என்று பொருள்படும்படியாகத்தான் தங்களிடம் கூறினுன் என்று கூறிப் பழியைக் கொங்கணநாதன்மீது போட்டுவிட்டுத் தப்பிக் கொண்டனர். அரசன், கொங்கணநாதன் கூறிய சிறிய செய்தியே அவ்வாறு வளர்ந்து புலவருக்கு இழிவைக் கொடுத்துவிட்டதென்று ஐயமறத் தெரிந்து கொண்டான். அதற்கு முன்பும் கொங்கணநாதன்மீது இத்தகைய குற்றச்சாட்டுகள் வந்திருந்தமையின், இம்முறை புறங்கூறும் இப்புல்லனை நன்கு ஒறுக்கவேண்டும் என்னும் எண்ணத்துடன், கொங்கணநாதன் சங்கபுரத்தைவிட்டு வெளியேற வேண்டும் என்றும், எக்காரணத்தை முன்னிட்டும் சங்கபுரத்திற்குள் நுழையக் கூடாது என்றும் கடுமையாகக் கட்டளை இட்டான். புறங்கூறுவதால் ஏற்படும் தொல்லை இத்தகையதென்று கொங்கணநாதன் இப்பொழுதுதான் உணர்ந்தான். ஆயினும் என்ன பயன்? கொங்கணநாதன் தன் உற்ருர் உறவினர்களையும் பிறந்த ஊரையும்விட்டு வெளியேறும்படியாகவே முடிந்தது.

*ஒருவன் ஒருவன் குறையுரைத் திடவே யதைக் கேட்டோர்*
*பெரு(கு) அபத்தங் கலந்த பலபேர்க் குரைக்க இவ்வாறே*
*மருவி யெங்கும் பரவுதலான் மண்ணில் முன்னம் தூறுமவன்*
*குருநோய் ஒப்பான் அவனைக் கோனூர்விட்(டு) அகற்றல் நன்றே.*

(அ - ரை.) அபத்தம்—பொய். மருவி—பொருந்தி. தூறம்—தூற்றும், பழிக்கும். குருநோய்—வருத்தம் தரும் நோய். கோன்—அரசன்.

---

## உரு. அடங்காப் பிடாரி

திருத்தண்டலை நீள்நெறி என்னும் ஊரிலே முருகப்பப்பாவலர் என்று பெயருடைய ஒரு புலவர் இருந்தார். அவர் பல நூல்களையும் ஐயமறக் கற்றுணர்ந்த மெய்யறிவாளர். இவருக்குத் திருமணம் இனிது நடைபெற்றது. புலவரின் பழவினைப் பயனால் அவருடைய மனைவி ஓர் அடங்காப் பிடாரியாக இருந்தாள்.

புலவர் தம் மனைவிக்குப் பலவகையாக நல்லறிவுரைகளைப் புகன்று பார்த்தார். ஒன்றும் பயனில்லை. எல்லாம் புல்லர்க்கு நல்லோர் புகன்ற பொருளுரையாகப் போய்விட்டன.

அப்பெண் அடுத்த வீடுகளெல்லாவற்றிற்கும் போய்ச் சுற்றுவாள். கணவன் வந்து சாப்பிடுவதற்கு முன்பே தான் சாப்பிட்டுவிடுவாள். எத்தகையோருக்கும் அஞ்சவும் மாட்டாள்; அடங்கவும் மாட்டாள். யாவரிடத்திலும் எப்போதும் கடுகடுப்பாகத்தான் பேசுவாளே தவிரப் பொறுமையுடனும் இனிமையுடனும் பேசமாட்டாள். தன்னுடைய கணவனுக்குத் தெரியாமலே சிறுபொருள் தேடுவாள். அதன்பொருட்டு வீட்டிலுள்ள எந்தப் பொருளையும் புலவருக்குத் தெரியாமல் விற்றுவிடுவாள். புலவர் ஒன்று சொன்னால் தான் பத்துச் சொல்வாள். நன்கு படித்துத் தேர்ந்த நமக்கு இத்தகைய பேரறிவுக்காரி மனைவியாக வந்து வாய்த்தாளே என்று புலவர் எண்ணி எண்ணி ஏங்கினார். அவளுடைய போக்குந் தொல்லையும் நாளடைவில் அவரால் பொறுக்கக்கூடாதனவாயின. "சற்றே, ஏறுமாறு யிருப்பளே யாமாயின், கூறுமற் சந்நியாசங்

கொள்,” என்று பெரியோர் கூறியுள்ளபடி நாமும் இவளைத் துறந்து துறவியாகப்போதல் தான் தக்கது என்று முடிவுசெய்தார். தமக்குரிய வீடுவாசல் முதலிய எல்லாப் பொருள்களையும் விட்டுவிட்டுத் துறவிக் கோலம்பூண்டு அவ்வூரிலுள்ள கோவிலையடுத்து அங்கே அமர்ந்திருந்தார். அப்போது சிலர் அவரையடைந்து “எல்லாமுணர்ந்த தாங்கள் இவ்வாறு செய்யலாமா?” என்று கேட்டனர். அதற்குப் புலவர், “அடங்காப் பிடாரியைப் பெண்டாட்டியாக வைத்துக்கொண்டு குடித்தனம் நடத்துவதைவிட இவ்வாறு கோலம்பூண்டு துறவியாகச் செல்வதுதான் தக்கது. இவ்வாறு செல்லுமாறுதான் உண்மையறிவாளர்கள் உரைத்திருக்கின்றனர்,” என்று கூறிவிட்டுப் போனவிடந்தெரியாமல் போய்விட்டார்.

அடுத்தமனை தொறுந்திரிவாள் கணவனுணும்
முனம்உண்பாள் அடக்கம் இல்லாள்,
கடுத்தமொழி பேசிடுவாள் சிறதனங்தே
டுவள் இவளைக் கலந்து வாழ்தல்,
எடுத்தவிடைக் கொடியாரே தண்டலையா
ரேயெவர்க்கும் இன்ப மாமோ?
குடித்தனமே கெடவேண்டிப் பிடாரிதனைப்
பெண்டுவைத்துக் கொண்ட தாமே.

அ - ரை.) அடுத்தமனை - பக்கத்துவீடு. கடுத்தமொழி - சிடுசிடுப்புள்ள பேச்சு. விடைக்கொடி-எருதுக்கொடி. பெண்டு - பெண்டாட்டி.

---

## ௨௬. அறிவில்லாத் தாய்தந்தையர்

திக்கெல்லாம் புகழூஞ் சென்னைப்பட்டினத்திலுள்ள திருவல்லிக்கேணியில் அழகப்பன் என்றோர் இளைஞன் இருந்தான். இவன் மிகவும் வேடிக்கைப் பேர்வழி மேனாட்டு நாகரிகத்திலே மிகவும் தியங்கிப்போயிருந் தான். எப்பொழுது பார்ப்பினும் கையிலே ஒரு சுருட் டைப் புகைத்தவண்ணமாகவே இருப்பான். எப் போதோ சில பொழுதுகளில் மேனாட்டுக் குடிவகைகளி லும் சிலவற்றைக் குடிப்பான். இவனுக்குத் திருமணம் நடைபெற்றது. தன்னுடைய மனைவிக்கும் சுருட்டுப் பழக்கத்தைப் பழக்கிவிட்டான். அவள் அவனைத் திருத்துவதற்குப் பதில் அவனுடைய பழக்கத்தைத் தானும் பழகிவிட்டாள்.

ஆண்டுகள் சில சென்றன. இவர்கட்குச் சில பிள்ளைகள் பிறந்தார்கள். தங்கள் தீய பழக்கத்தை விடாதிருப்பின் தங்கள் சிறுவர்களும் இப்பழக்கத்தை மேற்கொண்டு கெட்டுப்போவார்களே என்று அவர்கள் ஒருசிறிதேனும் எண்ணவில்லை. வழக்கம்போல் தங்கள் பழக்கத்தை மேற்கொண்டே யிருந்தார்கள். சிறுவர்கள் மூன்று நான்கு வயதடைந்தபோதே அவர்களும் தங்கள் தாய் தந்தையர் சுருட்டுக் குடிப்பதைப் பார்த்துத் தாங் களும் குடிக்கப் பழகிக் கொண்டார்கள். குடியோடு மற்றைய கெட்ட பழக்க வழக்கங்களும் கூடிக்கொண் டன. இவர்களுக்கு நான்குபிள்ளைகள் பிறந்தனர். ஆயினும் அவர்களுடைய உடல் மிக இளமைக் காலத்திலே நஞ்சுத்தன்மை பொருந்திய உடலாக மாறிவிட்டமையின் எல்லாப் பிள்ளைகளும் பதினைந்து பதினாறு வயதிற்குள்ளேயே கூற்றுவன் உலகிற்குக்

குடிபுகுந்து விட்டார்கள். அப்பிள்ளைகள் அவ்வாறு இறந்துபோனமையையும் அப்பிள்ளைகளின் தாய் தந்தையரின் தன்மையையும் உணர்ந்தவர்கள், 'அப்பிள்ளைகளுக்குத் தாய் தந்தையரே பகையாகவிருந்து அவ்வாறு கெடுத்துவிட்டார்கள்,' என்று தூற்றினார்கள். பிள்ளைகளைப் பறிகொடுத்த பிற்பாடுதான் தாங்கள் தங்கள் பிள்ளைகளுக்கு முன்னால் தீய செய்கைகளை மேற்கொண்டிருந்ததன் தீமையை உணர்ந்து வருந்தினார்கள்.

நீதகன்(கு) அறிவிலாச் சேயர் என்செய்வர்?
கோதற அவரைநன் னெறியில் கூட்டிடா(து)
ஏதங்கள் அவர்முன்செய்(து) இழிவைக் கற்பிக்கும்
தாதைதாய் புதல்வர்க்குச் சத்து ருக்களே.

(அ - ரை.) சேயர் - பிள்ளைகள். கோதற - குற்றம் நீங்க. ஏதங்கள் - தீயவைகள். தாதை - தந்தை. சத்துருக்கள் - பகைவர்கள்.

---

## உ௭. எவரையும் பகைத்தல் ஆகாது

ஓர் ஊரிலே ஒரு தடியன் இருந்தான். ஆள்தான் தடியனே தவிர அறிவு தக்கபடியில்லை. தன் உடல் வலிமை ஒன்றையே பெரிதாக நினைத்து எவரையும் ஒரு பொருட்படுத்தாமல் செருக்கித் திரிந்தான். செல்வர், வலியோர், எளியோர் ஆகிய எல்லோரிடமும் வம்பு செய்வான். இவன் வம்புக்காரன் என்பதையுணர்ந்து எவரும் இவன் பேச்சுக்குப் போவதில்லை. அதனால் இவனுக்கு நாளடைவில் திமிர் மிகுந்து வந்தது. ஒருவரிடத்தில் தனக்குச் சிறிது வெறுப்பு ஏற்படினும் பெருஞ்சண்டை தொடங்குவான்.

அவ்வூரிலே ஓர் அறிஞர் இருந்தார். அவர் தடியனுடைய போக்கைப் பார்த்தார். அவன் அப்படியே பலரிடமும் நடந்துகொள்வானுனல் தீமையேற்படும் என்பதை உணர்ந்தார். ஒருநாள் அத்தடியனைக் கண்டு, "நீ எவரிடமும் வலியச்சென்று வம்பு செய்கின்ருய். இவ்வாறே தொடர்ந்து செய்வாயானுல் உனக்குத் தொல்லையேற்படும். உன்னுல் எதிர்க்கப் பெறுகிறவர்கள் உன்னிலும் வலியவர்களானுல் உன் பாடு போன இடம் தெரியாமற் பறந்து போகும். உன்போல் தகுதியான பலம் உடையவர்களானுல் உனக்குக் கொடுக்க வேண்டிய பதில் வரும்படியைத் தகுந்தபடி கொடுத்து விடுவார்கள். உன்னிலும் பலம் அற்ற எளியவர்களைச் சென்று நீ எதிர்த்துத் தொல்லை செய்வாயானுல் அத்தீவினையின் பலனுக நீ இழிந்த கொடிய நிரயத்தில் வீழ்வாய்; ஆகையால் எவரிடமும் வம்புக்குப் போகாதே?" என்று நல்லுரைகள் கூறினுர். அறிஞர் சொல்லியவற்றைத் தடியன் கேட்கவில்லை. இளைத்தவன் போற் காணப்பெற்ற ஒருவனைத் தடியன் ஒருநாள் கண்ட போது, 'நீ பஞ்சத்தில் அடிபட்டவனு என்ன? இப்படி எலும்புந் தோலுமாக இருக்கின்ருயே?' என்று இழிவு தோன்றக் கேட்டான். உண்மையில் அந்த மனிதன் ஒரு பயில்வான். உடற்பயிற்சி செய்து அவனுடைய கால் கைகளெல்லாம் நன்கு முறுக்கேறி இரும்பைப் போல் இருந்தன.

அவன் தடியன் கேட்ட கேள்விக்குப் பதிலாக, "நான் பஞ்சத்தில் அடிபட்டவன் அல்லன். உன்னைப் போன்ற தடியர்களை ஓர் அடியில் வீழ்த்திவிடுவேன். பஞ்சு மூட்டையைப்போல் பெருத்துத் தடித்துப் போயிருக்கின்ற வலியற்ற பையல்களால் எல்லாம்

யாது முடியும்! வேண்டுமானால் வா ஒருகை பார்க்கலாம்," என்றான். தடியன் அதுவரை யாரிடமும் கைச்சண்டைக்குப் போனவன் அல்லன். ஆள் கிடைக்குமா என்றுதான் எதிர்பார்த்துக்கொண்டு இருந்தான். அந்த மனிதன் மேற்கண்டவாறு கூறவே, தடியன் சீறியெழுந்து அவன் முகத்திலே ஒரு குத்து விட்டான். அக்குத்து அம்மனிதனுக்கு மலர்க்கொத்தைக் கன்னத்தில் ஒத்தியதைப்போல் இருந்தது. அவன் தடியனைக் குண்டாங்கட்டாகத் தூக்கி ஒரு சுழற்றுச் சுழற்றி விசியெறிந்தான். தடியன் பதினைந்தடி தூரத்திற்கு அப்பால் போய்ப் பொத்தென்று வீழ்ந்தான். நல்ல அடி. உடலெல்லாம் புண். அவனால் எழுந்திருக்க முடியவில்லை. சிலரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட தன்மேல் அவர்கள் அவனைத் தூக்கிக்கொண்டுபோய் அவன் வீட்டிலே போட்டார்கள். அப்பொழுதுதான் அவனுக்கு அறிஞர் கூறிய நல்லுரையின் அருமையும் பெருமையும் புலப்பட்டன. அன்றுமுதல் அவன் தன்னுடைய வாய்வீச்சை எல்லாம் விட்டுவிட்டு நல்லவன் ஆனான்.

பெரியவர் தம்மைக் காய்ந்தான் பிறங்கல்கல்
வியகோல் ஒப்பான்
புரிவன புரியப்பட்டுப் புலம்புவன்
ஒத்தார்க் காய்ந்தான்,
எரிநர கத்தில் வீழ்வன் இருந்தவர்க்
காய்ந்தான் என்றால்,
ஒருவர்தம் இடத்தும் சீற்றம் உறுமையே
நன்று மாதோ.

(அ - ரை.) காய்ந்தான் - சினந்தான். பிறங்கல் - மலை. கல்லிய - தாக்கிய. புரிவன - செய்யவேண்டியன.

---

## உ அ. ஏற்றலின் இழிவு

ஓர் ஊரிலே ஒரு செல்வர் இருந்தார். பழவினைப் பயனுல் அவருடைய செல்வம் சிறிது சிறிதாக அழிந்து இறுதியில் ஒன்றுமில்லாமற் போய்விட்டது. அதனுல் அச்செல்வர் சிறிதும் தளர்ச்சி யடையவில்லை. செல்வம் வந்தவழியே போகும் என்பதை உணர்ந்தவர் அவர். அவருக்கு ஆண்டும் மிகுதியாக ஆய்விட்டது. பிள்ளை குட்டிகளோ இல்லை உலகில் இருக்கும்வரை வயிற்றை நிரப்பவேண்டும். அதற்கு வழி யாது என்று எண்ணினுர்.

சில பொருள்களை வாங்கி அவற்றைத் தம் தலை மீது சுமந்து வீடுவீடாகச் சென்று விற்று அதனுல் வரும் ஊதியத்தைக்கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தார். இவருடைய பழைய செல்வ நிலைமையையும் இப்பொழுதுள்ள வறிய நிலைமையையுங் கண்ட சிலர், 'அந்தோ! தாங்கள் இவ்வாறு வருந்தவும் நேரிட்டதே! இவ்வாறு முதுமைப் பருவத்தில் தொல்லைப்பட்டு வாழ்க்கை நடத்துதல் இயலுமா? தங்களுடையநண்பர்களாகிய செல்வர்கள் பலர் இருக்கின்றுர்களே. அவர்களிடம் சென்று உதவி செய்யுமாறு கேட்டால் செய்வார்களே! அவ்வுதவியைப் பெற்று இனிது வாழலாமே,' என்று அறிவுரைகூறலானுர்கள் இவ்வுரையைக்கேட்ட செல்வர் நகைத்து, 'நீங்கள் எனக்கு நல்லது கூற வந்தவர்களல்லர்! என்னை ஐயம் ஏற்போனுக ஆக்குதற்கே வந்திருக்கின்றீர்கள்! ஏற்றலின் இழிவை நீங்கள் அறியமாட்டீர்களா? செல்வர்களிடத்திலே சென்று, அவர்கள் யாது கூறுவார்களோ என்று அஞ்சிக்கொண்டேபற்கள் எல்லாவற்றையுந் தெரியும்படியாகக் காட்டி, தான்படுந்

துன்பமெல்லாவற்றையும் முகத்தினிடத்திலே கூட்டி அவர்களைப் புகழவேண்டிய சொற்களையெல்லாம் சொல்லிப் புகழ்ந்து நாட்டி, இரண்டு கைகளையும் விரித்து நீட்டி, தன் பெருமையெல்லாம் நீங்குமாறு ஓட்டி, வீடு வீடாகச் சென்று இரப்பது மிக இழிவாகும். இதனை நீங்கள் ஐயமின்றி அறிந்துகொள்ளுங்கள்,' என்றார். செல்வருரையைக் கேட்டு அவருக்கு அறிவுரை கூறிய நண்பர்கள், 'அவர் கூற்றுப் போற்றத்தக்கதுதான். நாம் அவருடைய உள்ளக்கிடக்கையை உணராது அறிவுரை கூறச் சென்றோமே,' என்று வருந்தி நீங்கினர்.

பல்லெல்லாம் தெரியக் காட்டிப் பருவரல் முகத்தில் கூட்டிச்
சொல்லெலாஞ் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லெலாம் அகல ஓட்டி மானமென் பதனை வீட்டி
இல்லெலாம் இரத்தல் அந்தோ இழி(வு)இழி(வு) எந்த ஞான்றும்

(அ-ரை.) பருவரல் - துன்பம். துணைக்கரம் - இரண்டுகை. மல் - பெருமை.

---

## உகூ. பேரறிஞர் முன் சிற்றறிஞர்

ஒரு புலவர் தம்முடைய இராமாயணத்தை ஓர் ஊரிலே விரித்துச் சொற்பொழிவு செய்துகொண்டிருந்தார். அங்குக் கூடியிருந்த மக்களெல்லாம் கல்வியறிவில்லாத பொதுமக்களாதலின் புலவர் தம்முடைய சொற்பொழிவைச் சண்டமாருதமாகப் பொழிந்து கொண்டிருந்தார். மக்களும் வாயில் ஈ நுழைவதுகூடத் தெரியாமல் இன்பத்தில் இனிது திளைத்துக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

அப்போது அந்த இடத்திற்கு அவ்வைப்பிராட்டியார் தற்செயலாக வந்து சேர்ந்தார், அவ்வைப்பிராட்டி

யார் பெரும் புலவரல்லவா? அவரைக் கண்டதும். அப்புலவருக்கு அச்சம் உண்டாகிவிட்டது. தம்முடைய சொற்பொழிவில் அவ்வையார் எத்தகைய குற்றம் கண்டு பிடிப்பாரோ என்று எண்ணி மிகவும் மெலிந்த குரலில் ஒருவாறுகச் சொற்பொழிவு நடத்தியதுடன் அடிக்கடி அவ்வையாரைப் பார்த்துத் 'திறுதிறு' என்று விழித் தார். புலவருடைய தொடைநடுக்கம் அவ்வையாருக்கு நகைப்பை யளித்தது.

புலவரின் சொற்பொழிவு பலருக்கும் விளக்கமாகக் கேட்கவில்லை. ஒருவர் புலவரைப் பார்த்து, 'என்ன இப்படி மெதுவாகச் சொல்லுகிறீர்கள்? சரியாகக் கேட்கவில்லையே!' என்றனர்.

உடனே அவ்வையார், 'கற்றவர்கட்குத் தெரி யாமல் என்றால் வேண்டியபடி கத்தலாம். கற்றவர் களுக்கு முன்னால் அஞ்சாமல் வாய்திறக்க முடியுமா? நீங்கள் கிளி பேசுவதைப் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? அது ஏதாவது பேச்சுப் பேசித் தனக்கு எல்லாம் பேசத் தெரிந்ததுபோல் நடித்துக்கொண்டிருக்கும், ஒரு பூனை யைக் கண்டுவிட்டாலோ அதன் பேச்சுப் போன இடம் தெரியாது. பேச்சையெல்லாம் மறந்துவிட்டுக் 'கீச்சுக் கீச்சு' என்று கத்தத் தொடங்கிவிடும். இப்புலவன் கதையும் அப்படித்தான்,' என்றனர். அவ்வையார் கூறியதைக் கேட்டு அவையிலிருந்தவர்கள் வியப்படைந் தனர்.

காணாமல் வேணதெல்லாம் கத்தலாம் கற்றோர்முன்
கோணாமல் வாய்திறக்கக் கூடாதே—நாணாமல்
பேச்சுப்பேச்(சு) என்னும் பெரும்பூனை வந்தக்கால்
கீச்சுக்கீச்(சு) என்னும் கிளி.

(அ - ரை) வேணதெல்லாம்—வேண்டியதெல்லாம். கோணாமல்—அஞ்சாமல்.

———

## ௩௦. கற்ருரைக் கற்ருரே காமுறுவர்

கல்லுப்பட்டி என்னும் ஊரிலே ஒரு புலவர் இருந்தார். அவர் பெரிய அறிஞர். பல நூல்களையும் ஐயந்திரிபு அறக் கற்றவர். பல நூல்கள் எழுதிய நூலாசிரியர். அவருடைய பெருமை கல்வி உலகிலே நன்கு பரவிச் சிறப்புற்றிருந்தது. ஆயினும் கல்லுப்பட்டியூரினர் அப்புலவரின் பெருமையைச் சிறிதும் அறியார். அப்புலவர் தம்மை அரியராக்கிக்கொள்ளாது அனைவோர்க்கும் எளியராகவே இருந்தமையின் ஊரினர் அனைவரும் அவரோடு நன்கு பழகியிருந்தனர். ஆனாலும் சந்திக்கும் இடங்களிலும் அப்புலவருடைய வீட்டுக்குச் செல்லும்போதும் வெற்றுரையாடி வீண்பொழுது போக்கிவிட்டு வருவார்களே யல்லாமல், உயிருக்கு உறுதிபயக்கத்தக்க நல்லுரைகளைக் கேட்கமாட்டார்கள். புலவரும் இம் மூழுமக்களுடைய போக்கை யுணர்ந்து அவர்கட்குத் தக்கபடியாகத் தாம் பேசுவாரேயன்றி, அவர்கள் வெறுப்படையத்தக்க நல்லுரை யொன்றையும் நவிலார்.

இப்புலவருடைய வீட்டிற்கு மிகு தூரத்திலேயிருந்து பலர் அடிக்கடி வந்து தமக்குத் தெரியாத ஐயப்பாடாயுள்ள செய்திகளை அறிந்துகொண்டு போவர். அவ்வாறு ஐயந்தெளிய வருவோரும் அறிஞர்களேயாவர். ஒருகால் ஒருவர் புலவரைப் பார்த்துத் தமக்குள்ள ஐயப்பாட்டினை அகற்றிக்கொண்டு போதற்கு வந்தார். அதுபோது அவ்வூரினர் ஒருவர் புலவரிடம் வந்து பயன் இல்லாத வெற்றுரைகளைப் பேசிக்கொண்டிருந்தார். அவர் சென்றபின் வந்த புலவர் பெரும் புலவரை நோக்கி, 'என்ன இவ்வூரினர் தங்களுக்கருகில்

வாழ்ந்திருந்தும் பயனுள்ள செய்திகளையறிந்து மகி ழாமல் பயனில்லாதவற்றைப் பேசி வீண்பொழுது போக் கிச் செல்கின்றனரே ?' என்று கேட்டார்.

அதற்குப் புலவர், 'தாமரைத் தடாகத்தில் இருக் கும் தவளையானது தான் அந்தத் தாமரையருகிற் பிறந்து அவ்விடமே வாழ்ந்திருந்தாலும் அத்தாமரையிலுள்ள தேனைக் குடித்து மகிழ்கிறதா ? அல்லது தேன் அத் தாமரையின் இடத்தில் இருக்கிறது என்பதையாவது உணர்ந்து அத்தாமரையைப் போற்றுகின்றதா? காட்டிற் பிறக்கும் வண்டல்லவா அங்கிருந்து வந்து தேனைக் குடித்து மகிழ்ந்து செல்லுகின்றது. நீண்ட காலமாகப் பழகிக்கொண்டிருப்பினும் அறிவில்லாத புல்லர்கள் நல்லோர்களை அறியமாட்டார்கள். மேலும் அருகிலுள்ள பொருளுக்கு மதிப்பேது? அறிஞர்கள் தம்முடைய ஊரிலே நல்ல பெருமையை அடையமாட் டார்கள். அவர்களுக்கு வேருேர் இடத்திலேதான் பெருமை கிடைக்கும். ஆதலின் இவ்வூரினரது இயல் பிலே வியப்பொன்றும் இல்லை,' என்று கூறினர். வந்த புலவர் பெரும்புலவர் கூறிய உவமை பொருந்தும் என்று கூறி மகிழ்ந்து சென்ருர்.

தண்டா மரையின் உடன்பிறந்தும் தண்தேன் நுகரா மண்டூகம்
வண்டே கானத்(து) இடையிருந்து வந்தே கமல மதுவுண்ணும்
பண்டே பழகி இருந்தாலும் அறியார் புல்லோர் நல்லோரைக்
கண்டே களித்தங் குறவாடித் தம்மிற் கலப்பர் கற்ருேரே.

(அ—ரை.) தண்—குளிர்ச்சி. நுகரா—சாப்பிடா. மண்டூகம்—தவளை. கமலம்—தாமரை. மது - தேன். புல்லர் - கீழோர்.

---

## ௬௧. பணத்தின் பெருமை

கரடிப்பட்டி என்னும் ஊரிலே மூக்கன் என்று பெயருடைய ஒரு பறையன் இருந்தான். ஒருநாள் அவன் தன்னுடைய வீட்டுக் கொல்லையிலே தண்ணீருக்காக ஒரு நீர்ஊற்றுத் தோண்டிக்கொண்டிருந்தான். அப்பொழுது அவனுடைய மண்வெட்டியிலே 'டணார்' என்று ஏதோ அடிபட்ட ஒலி கேட்டது. உடனே அவன் உற்று நோக்கியபோது ஒரு செப்புத்தவலை புதைந்திருப்பதாகத் தெரிந்தது. நல்ல வேளையாக அருகில் எவருமில்லை. அவன் அதை அப்படியே மூடிவிட்டு அன்று நள்ளிரவில் சென்று மீண்டுந் தோண்டினான். செப்புத்தவலை மூடியபடி வெளிப்பட்டது. தன் வீட்டுக்குக் கொண்டு சென்று திறந்து பார்த்தான். நிறையப் பொன்னும் வெள்ளியுமாக இருந்தன.

மூக்கன் அப்புதையல் செய்தி தன் மனைவி மக்களுக்குக்கூடத் தெரியாவண்ணம் மறைத்துவிட்டு அதனை மீண்டுந் தன் குடிசைக்குள் புதைத்துவிட்டான். சிறிது சிறிதாகப் பொருளை வெளியிலெடுத்து நிலபுலங்கள் வாங்கினான். விடு வாசல்கள் கட்டிக்கொண்டான். மிகு விரைவில் அவன் ஒரு பெரிய பணக்காரனாக எல்லோராலும் மதிக்கப்பட்டான். அவன் புதையல் கிடைத்த செய்தியை மறைத்துவிட்டு, ஒரு தெய்வம் கனவிலே தோன்றித் தனக்குச் செல்வம் கிடைக்குமாறு அருள் புரிந்ததென்று கதை கட்டிவிட்டான். பணக்காரன் பேச்சல்லவா! எல்லோரும் அவன் கூறியதை நம்பினார்கள். அவனோடு எந்த வகையிலும் தொடர்பு கொள்வதை ஊரார்கள் விரும்பினார்கள். ஊரிலுள்ள உயர்குலத்தவர்களைக்கூட ஊரார்கள் ஒரு பொருட்

படுத்தவில்லை. மூக்கன் மகனுக்குத் தங்கள் பெண்ணைக் கொடுப்பதற்குக்கூட உயர்குலத்தவர்கள் விரும்பினார்கள். ஊரிலுள்ள உயர்குலத்தவர்கள் செல்வப் போக்கால் அடைந்திருக்கும் மன மாறுபாட்டைக் கண்டு அந்த ஊரில் இருந்த ஒரு புலவர் மிகுந்த வியப்படைந்தார்.

பொன்னொடு மணியுண் டானல் புலைஞனும் கிளைஞன் என்று
தன்னையும் புகழ்ந்து கொண்டு சாதியின் மணமுஞ் செய்வர்
மன்னரா யிருந்த பேர்கள் மதிகெட்டுப் போவ ராயின்
பின்னையும் ஆரோ என்று பேசுவார் ஏசு வாரே.

(அ - ரை.) புலையன் - பறையன். கிளைஞன் - உறவினன். ஏசுவார் - இகழ்வார்.

---

## ௯௨. மெய்ம்மையின் மேன்மை

ஓர் ஊரில் முத்தையன் என்றும் முருகையன் என்றும் இரண்டுபேர் உடன்பிறந்தார்கள் இருந்தார்கள். முத்தையன் மூத்தவன். முருகையன் இளையவன். அவர்கள் ஊரிலேயே அவர்கள் இருவருந்தான் குறிப்பிடத்தக்க செல்வர்கள். முருகையனைவிட முத்தையனுக்குச் செல்வம் மிகுதியாக இருந்தது. இருவரும் தந்தைவைத்த பொருளைப் பங்கு பிரித்துக்கொண்டபோது சரிசமமாகத்தான் பிரித்துக்கொண்டார்கள். முத்தையன் தில்லுமல்லும் பொய்புரட்டுஞ் செய்து தனது செல்வத்தை மிகுதியாகப் பெருக்கியிருந்தான். முருகையனோ அவ்வாறு பெருக்கவில்லை. முத்தையன் பேசும் பேச்சுக்களில் உண்மை சிறிதும் கலப்பாகக் கூட இருக்காது. இவ்வாறே முருகையன் பேசும் பேச்சுக்களில் பொய் என்பது அறவே இருக்காது. முத்தையன் பெரும் பொய்காரன் புரட்டுக்காரன் என்பதையும், முருகையன் பொய்யே பேசாத நல்லவன் என்பதையும்,

அறிந்த ஊரார்கள் முத்தையனுக்குப் 'பொய்யப்பன்,' என்றும் முருகையனுக்கு, 'மெய்யப்பன்,' என்றும் காரணப்பெயர்கள் வைத்துவிட்டனர்.

ஊ ரா ர் க ள் எக்காரியத்திற்கும் முத்தையனை அறவே நம்பமாட்டார்கள். அவன் கூறுவது முழுவதும் உண்மை கலப்பில்லாத பொய் என்பதை அறிந்த அவர்கள் அவன் சொல்லைக் காதில் வாங்குவதே இல்லை. ஆனால், முருகையன் சொன்னாலோ மறைமொழியைப் போல் நம்புவார்கள். முருகையனுக்கு ஆயிரரூபா கடன் வேண்டுமானாலும் எவ்வித ஆதாரமும் இன்றி வாய்மொழிக்கே மதிப்புவைத்துக் கொடுப்பார்கள். முத்தையனை நம்பியோ ஒரு தம்பிடிகூடக் கொடுக்க மாட்டார்கள். ஊரார்கள் தன் தம்பிக்குக் கொடுக்கும் மதிப்பைப்போல் தனக்குக் கொடுத்துத் தன்னைப் போற்றுவதில்லையே என்று மிகவும் வருந்தினான் முத்தையன். அவன் தன்னுடைய பொய் பித்தலாட்டங்களை யெல்லாம் அறவே யொழித்து நல்லவன் ஆனான். ஆயினும் அவனை ஊரார்கள் எளிதில் நம்பவில்லை. அவன் தன் தம்பியினுடைய மதிப்பைப்போல் அடைவதற்கு நீண்டநாட்கள் ஆயின.

மெய்யரெனப் பெயர்பூண்டார் வறிஞரே
யெனினும்நீதி மிகவும் அன்னார்,
கையதனில் கொடுத்தவைக்க எவருமஞ்சார்
பொய்யரெனக் கவ்வை பூண்டார்,
செய்பொருள் மிகவுளார் எனினும் அவர்
கையில்ஒரு செல்லாக் காசும்
ஐயமின்றி ஒருவர்கொடார் எனிற்படிறின்
தன்மைதனை அறைவ தென்னே?

(அ-ரை.) கவ்வைபூண்டார் - பழிப்புச்சொல் பெற்றவர். படிறின் - பொய்யின். அறைவது - சொல்வது.

———

## ௫௫. சூதுவெறிகொண்ட சுப்பன்

மறைக்காடு என்னும் ஊரிலே சுப்பன் என்னும் பெயருடைய ஒருவன் இருந்தான். அவனுக்குச் சூதாடும் வெறி தலைக்கேறிவிட்டது. இரவு என்றும் பாரான்; பகல் என்றும் பாரான். கூட ஆடுவதற்கு மட்டும் ஆள்கிடைத்தால் எந்நேரமும் ஆடிக்கொண்டேயிருப்பான். சுப்பனுக்குச் சாப்பாடுகூட வேண்டியதில்லை. கூடச் சூதாடுவதற்கு ஆள்மட்டும் கிடைத்தால் போதும். இவ்வளவிற்கும் சுப்பன் சூதிலே தோல்வி தான் அதிகம் அடைவானே தவிர, வெற்றி அதிகம் அடையமாட்டான். தன் முன்னோர் தேடிவைத்த பல பொருள்களையும் சுப்பன் சூதிலே தோற்றுத் தீர்த்தான். சூதிலே இடையிடையே அவனடைந்த இரண்டொரு வெற்றிதான் அவனை மேன்மேலுஞ் சூதிலே ஊக்கிற்று. இவனது போக்கைக் கண்டு ஊரார் இவனுக்குச் 'சூது வெறிகொண்ட சுப்பன்' என்று பெயரை நீட்டி வைத்தனர்.

பலர் சுப்பனிடம் 'சூது தீது பயக்கும்' என்று அறிவுரை கூறியும் சுப்பன் அதனைப் பொருட்படுத்தவில்லை. சூதில் சிக்கியவர்கள் மீள முடியுமா? திருவள்ளுவதேவர் கூடத் தமது திருக்குறளிலே "ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கும் உண்டாங்கொல், நன்றெய்தி வாழ்வதோ ராறு," என்று நவின்றிருக்கின்றாரன்றோ?

சுப்பனுடைய மனைவி நோய்வாய்ப்பட்டுக்கிடந்தாள். சுப்பன் அவளைக்கூடச் சரியாகக் கவனிக்கவில்லை. சுப்பனுடைய உறவினர்கள் அவளுக்கு மருந்து முதலியன கொடுத்து அவளைக் கவனித்தனர். ஆயினும்

அவள் இறந்துபோனாள். அவள் இறந்த செய்தியை ஓராள் மூலம் ஊரார் சுப்பனுக்குத் தெரியப்படுத்தினர். உடனே சுப்பன் விரைந்து எழுந்து வீட்டை நோக்கி ஓடியிருப்பான் என்று நினைக்கின்றீர்களா? அப்படியெல்லாம் சுப்பன் கிளம்பி ஓடவில்லை. வழக்கம்போல் சூதாடுதலிலேதான் முழுக் கவனத்தையுஞ் செலுத்திக் கொண்டிருந்தான். சுப்பனுடன் ஆடிக்கொண்டிருந்தவர்கள் ‘உன் மனைவி இறந்தனளாமே! நீ வீட்டிற்குச் சென்று ஆவன செய்யவேண்டாவா? சூதிலேயே மூழ்கிக் கிடக்கின்றாயே!" என்றனர். அதற்குச் சுப்பன், ‘அது பற்றி கவலைப்படவேண்டியதில்லை. பிணத்தை யெடுக்குங் காரியங்களைப் பார்த்தலுக்கு வீட்டிலே ஆள் இருக்கிறார்கள். மேலும் பிணம் இவ்வழியேதானே சுடுகாட்டிற்குச் செல்லுதல்வேண்டும். பிணம் இப்பக்கம் வரும்போது புறப்படலாம். மேலும் அவள் அணிந்துள்ள தாலிகூடப் பந்தயம் வைத்தற்குப் பயன்படும்,’ என்று கூறினான். சுப்பனுடைய சூது வெறியைக்கண்ட மற்றவர்கள் வியந்து திகைத்துப்போயினர்.

கவறினை யாடுவோன் காந்தை வீயினும்
சவமதில் வழிசெலும் என்று தானெழான்
அவன்புனை தாலிபந் தயத்துக் காமென
உவகைபூத் தாடுவான் உயர்வுற் றேயரோ.

(அ - ரை.) கவறு - சூதாடுகருவி, காந்தை - மனைவி. வீயினும் - இறந்தாலும். உவகை - மகிழ்ச்சி.

———

## ௯௪. மெய்யறிவு பெற்ற மன்னன்

ஒரு பெரிய நாட்டை ஓர் அரசன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். முற்பிறவியின் நல்வினையினாலே அவனுக்கு உண்மையறிவு தோன்றிற்று. அதனாலே அவன் உலகப்பொருள்களினிடத்திலே தனக்கிருந்த பற்றைமுற்றத் துறந்துவிட்டான். தன்னுடைய அரண்மனையின் பொருளறையைத் திறந்துவைத்து ஏழை எளியவர்கள் வேண்டியமட்டும் அள்ளிக்கொள்ளலாம் என்று கட்டளையிட்டான். மேலும் நிலபுலங்களுக்கு வரி கொடுக்கவேண்டியதும் இல்லையென்று கூறிவிட்டான். இதனால் அரசனுடைய பொருளறை மிக விரைவிலேயே காலியாகிவிட்டது.

அமைச்சர் அரசனுடைய ஆசிரியர் முதலியோர் அரசனிடஞ் சென்று, 'இவ்வாறு அரசாட்சி புரிந்தால் அரசு நிலைபெறாது அழிந்து போகும்,' என்று அறிவுரை கூறினார்கள். உண்மையறிவு படைத்திருந்த அரசன் அவர்கள் பேச்சைக் கேட்கவில்லை. தன்னுடைய நோக்கம் போலவே காரியங்களைச் செய்துகொண்டு போனான். அரசாங்க அலுவலாளர்கட்குக் கொடுக்கவேண்டிய ஊதியங்கள் கொடுக்கப்பெறாதபடியால் அவர்களெல்லாரும் வேலை பார்க்காது நின்றுவிட்டார்கள். நாளடைவில் அரண்மனைத் தொழிலாளர்களும் வேலைக்கு வராது நின்றுவிடவே, எல்லாக் காரியங்களையும் அரசனே செய்துகொள்ள வேண்டியவன் ஆனான். அரண்மனைக்கு வேண்டிய உணவுப்பொருள் வாங்குவதற்குக்கூடப் பொருளில்லை. இந்த நிலையில் அரசன் சாப்பாட்டைக்கூட எதிர்பாராமல் வாளா இருந்தான். நிலைமையை உணர்ந்த சிலர் அரசனின் அரண்மனையில்

சமையலே நடக்கவில்லை என்பதை உணர்ந்து தங்கள் இல்லங்களிலிருந்து உணவு கொண்டுவந்து கொடுக்கலாயினர். அரசன் அதனைச் சாப்பிட்டுவிட்டு வழக்கம் போல இருந்தான்.

முன்பு அரசனுக்கு அறிவுரை கூறிய அமைச்சர் குரு முதலானவர்கள் மீண்டும் அரசனிடம் வந்து, 'என்ன இவ்வாறு செய்கிறீர்கள்? அரசாங்கமே இல்லாமற் போய்விட்டதே!' என்றனர். அரசன் அவர்களைப் பார்த்து, 'நீங்கள் என்ன ஒன்றும் தெரியாதவர்களாக இருக்கிறீர்கள்? நாம் இவ்வுலகில் பிறந்தபோது இடையிலே கோவணம்கூட இல்லாது பிறந்தோம். இறக்கும்போதும் ஒரு கோவணத்தைக்கூடக் கொண்டு போகப் போகிறதில்லை. நாம் இங்கு வாழும் இடைக் காலத்தில் காணப்படும் இப்பொருள்கள் நம்முடையதென்று ஏன் வீண்பெருமை பாராட்டி அவற்றை இறுகப் பற்றிக்கொண்டிருக்கவேண்டும்? பொருளை நாம் பாதுகாத்துக்கொண்டு அதனால் மகிழ்ச்சியடைந்து கொண்டிருப்பது ஊருக்குப் பொதி சுமக்கும் எருது தான் பொதி சுமப்பதைக் குறித்து மகிழ்ச்சியடைவது போன்றதன்றோ?' என்று கூறினான். அரசன் கூறியதைக்கேட்டு அமைச்சர் முதலாயினோர் அரசன் உண்மையறிவு பெற்று உயர்ந்துள்ளான் என்றுணர்ந்து வேறு யாதும் பேசாது மீண்டனர்.

இடையிற்கோ வணமும் இன்றி இங்குதித் தோம்அவ் வாறே
கடையினில் வெறுங்கை யோடும் கழிகுவம் நடுவிற் சேரும்
உடைமையாற் பெருமை யென்னோ ஊர்க்கெலாம் பொதிசு மக்கும்
விடைதருக்(கு) உற்ற தென்ன வீண்செருக் குற்றாய் நெஞ்சே.

(அ - ரை.) உதித்தோம்—பிறந்தோம். கடையினில்—இறுதியில். கழிகுவம்—நீக்குவோம். பொதி—மூட்டை. விடை—எருது. தருக்கு—செருக்கு.

# இந்நூலில் எடுத்தாளப்பட்டுள்ள கதைப் பாட்டுக்களின் அகரவரிசையும் நூற்பெயரும்.

## அகர வரிசையும் நூற்பெயரும்

